حقوق دعت اليها الفطرة و قررها الشريعة

(باللغة التاملية)

لسماحة الشيخ

**محمد بن صالح العثيمين** رحمه الله

ترجمة

**علي ابو خالد العمري**

**மனித இயல்பின் தேட்டத்தில் உள்ள,**
**ஷரீஅத் அங்கீகாரம் அளித்த**

# உரிமைகள் - கடமைகள்

## முஹம்மத் பின் ஸாலிஹ் உஸைமீன் (ரஹ்)

**தமிழில்**
**K.J. மஸ்தான் அலீ பாகவி உமரி**
**(அபூ காலித்)**

## பதிப்புரை

இஸ்லாம் ஓர் நிறைவான (தீன்) இறைமார்க்கம். மனித வாழ்க்கையின் எல்லா விவகாரங்களுக்கும் அது வழிகாட்டுகிறது.

இறைவனுடன் நமக்குள்ள தொடர்பு என்ன? மனிதர்கள் உள்ளிட்ட அவனுடைய அனைத்துப் படைப்புகளுடனும் நாம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதுதான் இஸ்லாம் காட்டும் நேர்வழியின் அடிப்படை.

இந்த ரீதியில் இறைவன், இறைத்தூதர், பெற்றோர்கள், உற்றார்கள், கணவன் - மனைவி, பிள்ளைகள், அண்டை வீட்டார்கள், ஆட்சியாளர்கள்,முஸ்லிம் பொதுமக்கள் ஆகியோரின் உரிமைகளும் -ஏன் முஸ்லிமல்லாதாருக்குச் செய்ய வேண்டிய கடமைகளும்கூட இஸ்லாமிய சன்மார்க்கத்தில் தெளிவாக விவரிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இத்தகைய அடிப்படை உரிமைகள் - கடமைகளைத்தான் இந்நூல் சுருக்கமாக எடுத்துரைக்கிறது.

இவ்வுரிமைகள் மனித இயல்பிலேயே உள்ளவை என்பதற்கு ஏற்ப இந்நூலாசிரியர் இப்னு உஸைமீன் (ரஹ்) அவர்களின் விளக்கும் பாணியும் ஆங்காங்கே இறைவச னங்களையும் நபிமொழி களையும் தொகுத்துத் தரும் பாங்கும் இதயத்தை இளகச் செய்யும் வகையில் அமைந்துள்ளன.

அதிலும் குறிப்பாக இறைவன், இறைத்தூதர், தாய் தந்தையர் ஆகியோருக்குச் செய்யவேண்டிய கடமைகளை எளிய நடையில் அழகாக, ஆழமாக வலியுறுத்துகிறார்கள். அவற்றைப் படிக்கும்போது இறைநினைவு இதயத்தை ஆட்கொள்கிறது., கருணைமிக்க ஏகனாகிய அல்லாஹ்வை வணங்கி அவனுடைய ஆணைகளுக்குக் கீழ்ப்படிந்து வாழ வேண்டும்., அப்பொழுதுதான் அவனுடைய அருட்கொடைகளுக்கு உண்மையில் நாம் நன்றி செலுத்துவோராய் ஆக முடியும் எனும் உணர்வு இதய ஆழத்தில் இருந்து பொங்கி எழுகிறது. இறைநம்பிக்கை உறுதிப்படுகிறது.

மனித வாழ்வு எனும் சக்கரம் இந்த அச்சில் அமைந்தால் எந்தச் சிக்கலுமின்றி அமைதியாகச் சுழன்று கொண்டிருக்கும்,. உலகில் அன்பும் மகிழ்வும் என்றும் நீடிக்கும் என்பது திண்ணம்.

இந்நூலாக்கப் பணியில் தக்க ஆலோசனைகள் அளித்த அன்பர்களுக்கு உளப்பூர்வமான நன்றியைத் தெரிவிப்ப துடன் அனைவருக்கும் நற்கூலி வழங்குமாறு அல்லாஹ் விடம் இறைஞ்சுகிறோம்!

5 - 10 - 1425 — அன்புடன்
உனைஸா — அபூ காலித் உமரி

بسم الله الرحمن الرحيم

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே. அவனை நாம் புகழ்கிறோம். அவனிடம் உதவி கேட்கிறோம். பாவமன்னிப்புத் தேடி அவனிடமே மீளுகிறோம். மேலும் நமது மனத்தின் தீங்குகளை விட்டும் நமது தீய செயல்களை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகிறோம். அல்லாஹ், எவரை நேர்வழியில் செலுத்துகிறானோ அவரை வழிகேட்டில் ஆழ்த்துவோர் யாரும் இல்லை., எவரை வழிகேட்டில் ஆழ்த்துகிறானோ அவருக்கு நேர் வழி காட்டுவோர் யாருமில்லை.

வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை., அவன் இணைதுணை இல்லாத ஏகன் என்று சாட்சி சொல்கிறேன். முஹம்மத், அல்லாஹ்வின் அடியார்.,தூதர் என்றும் சாட்சி சொல்கிறேன்.

முஹம்மத் நபி மீதும் அவர்களின் குடும்பத்தினர், தோழர்கள் மீதும் சீரான முறையில் அவர்களைப் பின்பற்றியோர் அனைவர் மீதும் அல்லாஹ் ஸலவாத் பொழிவானாக! அனைவருக்கும் ஈடேற்றம் அளிப்பானாக!

நீதியைப் பேணுவதும் ஒவ்வொருவருக்கும் அவரவரது உரிமையைக் கூடுதல் குறைவின்றி வழங்குவதும் இஸ்லாமிய ஷரீஅத்தின் சிறப்பம்சங்களில் உள்ளவையாகும். நீதி செலுத்துதல், நன்மை செய்தல், உறவினர்களுக்கு வழங்குதல் ஆகியவற்றை அல்லாஹ் கட்டளை யிட்டுள்ளான்.

நீதி செலுத்துவதற்காகவே இறைத்தூதர்கள் அனுப்பப்பட்டார்கள். வேதங்கள் அருளப்பட்டன. ஈருலகக் காரி யங்கள் நிலைகொண்டிருப்பதும் நீதியைக்கொண்டுதான்.

நீதி என்பது என்ன? ஒவ்வொருவருக்கும் அவரவர் உரிமைகளை வழங்குவதும் அவரவருக்குரிய அந்தஸ்தில் அவர்களை அமர்த்துவதும்தான் நீதி என்பது. எனவே உரிமைகளைப் பற்றி முறையாக அறியாத வரையில் அது நிறைவடையாது., உரிமைக்குரியவருக்கு உரிமையை வழங்கவும் முடியாது.

இந்த நோக்கத்தில்தான் இந்நூலை நாம் எழுதியுள்ளோம். இதில் மிக முக்கியமான உரிமைகள் - கடமைகள் விவரிக்கப் பட்டுள்ளன. மக்கள் அவற்றை அறிந்து முடிந்தவரை செயல்படுத்த வேண்டும் என்பதே நோக்கம். அவை பற்றிய சுருக்கமான விளக்கம் வருமாறு:

## 1 - அல்லாஹ்வுக்குச் செய்ய வேண்டிய கடமைகள்!

அல்லாஹ்வுக்குரிய இந்த உரிமைதான் உரிமைகளில் எல்லாம் மிக முக்கியமானது., கண்டிப்பானது., மகத்தானது! ஏனெனில் உயர்வுமிக்கவனாகிய அல்லாஹ்வுக்கு உரியதாகும் இது. அவன் இப்பேரண்டத்தின் படைப்பாளன். மாண்பும் மகத்துவமும் மிக்கவன். எல்லா விவகாரங்களையும் திட்டமிட்டுச் செயல்படுத்தக் கூடியவன்.

உண்மையானவனும் உண்மையை தெளிவுபடுத்திக் காட்டக் கூடியவனுமாகிய பேரரசனுக்குச் செலுத்த வேண்டிய உரிமையாகும் இது. அவன் நித்திய ஜீவன். (இப் பேரண்டம் முழுவதையும்) நன்கு நிர்வகிப்பவன். இந்த வானங்களும் பூமியும் நிலைகொண்டிருப்பது அவனது உதவி கொண்டுதான். எதார்த்தமான முழு தத்துவத்தின் அடிப்படையில் ஒவ்வொரு பொருளையும் படைத்துச் சீராக வடிவமைத்து பிறகு அவை ஒவ்வொன்றுக்கும் தனித்தனி விதியையும் நிர்ணயித்தவன் அவனே.

இது எப்படிப்பட்ட அல்லாஹ்வுக்குரிய உரிமை எனில், முன்பு நீங்கள் எந்த ஒரு குறிப்பிடத்தக்க பொருளாகவும் இல்லாதிருந்தீர்கள்., அத்தகைய 'இல்லாமையில்' இருந்து உங்களைப் படைத்தவன் அவன்தான்.

இது எப்படிப்பட்ட அல்லாஹ்வுக்குரிய உரிமை எனில், உங்கள் அன்னையின் வயிற்றில் மூன்று இருள்களின் உள்ளே நீங்கள் சிசுவாக இருந்தபோது, உங்களுக்குத் தேவையான உணவையும் உங்கள் வளர்ச்சிக்கான ஊட்டச் சத்தையும் உங்களிடம் சேர்த்திட எவருக்கும் எந்த சக்தியும் இல்லாதிருந்த சூழ்நிலையில் உங்களுக்கு உண்ண உணவும் உடல் வளர்ச்சிக்கான ஊட்டச் சத்தும் அளித்து உங்கள் மீது அருள்மாரிப் பொழிந்து வளர்த்துப் பரிபாலித்துக் காத்தவன் அந்த இறைவன்தான்!

நீங்கள் குழந்தையாக இருந்தபோது உங்கள் உணவுக்காக அன்னையின் மார்பகங்களில் பால் சுரக்கச் செய்தவன் அவன்தான். அவற்றில் பால் அருந்தும் வழிகாட்டுதலையும் உங்கள் உள்ளுணர்வில் ஏற்படுத்தித் தந்தான். பெற்றோர் இருவரையும் - உங்கள் மீது மனம் இரங்கும் வகையில் வசப்படுத்தித் தந்தான். இப்படி எத்தனையோ உதவிகளை அளித்து உங்களை ஆற்றல் மிக்கவராக அவன் உருவாக்கினான்.

ஆம், உங்கள் மீது பேரருட்கொடைகளைப் பொழிந்தான். அறிவையும் சிந்திக்கும் ஆற்றலையும் உங்களுக்கு வழங்கினான். அவற்றிலிருந்து பயன்பெறும் அளவு உங்களைத் தயார்படுத்தவும் செய்தான்! அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى : وَاللهُ أَخْرَجَكُمْ مِنْ بُطُوْنِ اُمَّهَاتِكُمْ لاَ تَعْلَمُوْنَ شَيْئًا وَ جَعَلَ لَكُمُ السَّمْعَ وَالابْصَارَ وَالافْئِدَةَ لَعَلَّكُمْ تَشْكُرُوْنَ

(النحل الاية: ٧٨)

உங்கள் அன்னையரின் வயிற்றில் இருந்து அல்லாஹ் உங்களை வெளிக்கொணர்ந்தான் - நீங்கள் ஏதும் அறியாதிருந்த நிலையில்! செவி மற்றும் பார்வைப் புலன்களையும் சிந்திக்கும் இதயங்களையும் உங்களுக்கு வழங்கினான் - நீங்கள் நன்றி செலுத்தக் கூடியவர்களாய்த் திகழ்ந்திட வேண்டும் என்பதற்காக" (16:78)

ஒரு கணம் அவன் தனது கிருபையை உங்களை விட்டும் தடுத்திருந்தால் நீங்கள் என்றோ அழிந்திருப்பீர்கள். ஒருவிநாடி உங்களை விட்டும் தனது அருளை அவன் நிறுத்தியிருந்தால் நீங்கள் உயிர் பெற்றிருக்கவே முடியாது.

இந்த அளவுக்கு அல்லாஹ் உங்கள் மீது அருளும் கிருபையும் பொழிந்திருக்கும் நிலையில், அவனுக்குச் நீங்கள் செலுத்த வேண்டிய உரிமை இன்னும் அதிக முக்கியத்துவம் பெறுகிறது! ஏனெனில் அவன் உங்களைப் படைத்து, பல தகுதிகளை உடையவராக உங்களைத் தயார் செய்ததற்கும் பல்வேறு உதவிகளை அளித்தற்காகவும் உங்கள் மீது அவன் பெற்றிருக்கும் உரிமையாகும் இது. அந்த இறைவன் நிச்சயமாக உங்களிடம் கைமாறு எதுவும் கேட்கவில்லை. உணவும் வாழ்வாதாரமும் எது ஒன்றும் உங்களிடம் எதிர்பார்க்கவில்லை. திருக்குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى : لاَ نَسْئَلُكَ رِزْقًا، نَحْنُ نَرْزُقُكَ وَ الْعَاقِبَةُ لِلتَّقْوَى (سورة طه ١٣٢)

ஏதேனும் வாழ்வாதாரம் அளிக்குமாறு நாம் உம்மிடம் கோருவதில்லை. நாமே உமக்கு வாழ்வாதாரம் வழங்கிக் கொண்டிருக்கிறோம். மேலும் நல்ல முடிவு இறையச்சத்திற்கே உள்ளது " (20 : 132)

உங்களிடமிருந்து அல்லாஹ் நாடுவது ஒன்றே ஒன்றுதான். அதன் நலன்கூட உங்களையே சேர்கிறது. அதுதான் இணைதுணையில்லா ஏக இறைவனாகிய அந்த அல்லாஹ்வை நீங்கள் வணங்க வேண்டும் என்பது! திருக்குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்:

وقال الله تعالى : مَا خَلَقْتُ الْجِنَّ وَ الاِنسَ اِلاَّ لِيَعْبُدُوْنَ ، مَا اُرِيْدُ مِنْهُمْ مِنْ رِّزْقٍ وَ مَا اُرِيْدُ انْ يُّطْعِمُوْنِ ، اِنَّ اللهَ هُوَ الرَّزَّاقُ ذُوْ الْقُوَّةِ الْمَتِيْنُ (الذاريات الآية: ٥٦-٥٨)

ஜின்னுகளையும் மனிதர்களையும் நான் படைத்தது -அவர்கள் என்னை வணங்க வேண்டும் என்பதற்காகவே அன்றி வேறில்லை. அவர்களிடம் இருந்து எந்த வாழ்வாதாரத்தையும் நான் நாடவில்லை. எனக்கு உணவு அளிக்க வேண்டும் என்றும் நாடவில்லை. நிச்சயமாக அல்லாஹ்தான் உணவு அளிப்பவன். பேறாற்றல் உடையவன். வலிமை மிக்கவன்" (51 : 56 - 58)

உங்களிடமிருந்து இறைவன் விரும்புவது என்ன? எவ்வாறு இரட்சித்தலின் ஒவ்வொரு அம்சத்துடனும் உங்களுக்கு அவன் இரட்சகனாக இருக்கிறானோ அவ்வாறே அடிபணிதலின் நிறைவான கருத்துக்களுடன் அவனுக்கு நீங்கள் அடிபணிந்திட வேண்டும் என்றுதான் விரும்புகிறான். அவனுக்குக் கீழ்ப்படிந்து, அவனுடைய கட்டளைகளை நிறைவேற்றி, அவன் விலக்கும் தீமைகளை விட்டு விலகி வாழும் நல்லடியாராகவும் (வேதங்கள், தூதர்கள் மூலம்) அவன் அறிவிக்கும் செய்திகளை உண்மையென ஏற்கும் நம்பிக்கையாளராகவும் நீங்கள் திகழ்ந்திட வேண் டும் என்றுதான் அவன் விரும்புகிறான்.

அவனுடைய அருட்கொடைகள், இடைவிடாமல் உங்கள் மீது முழுமையாகப் பொழிவதை நீங்கள் காண்கிறீர்கள். அத்தகைய அருட்கொடைகளுக்கு - நன்றி மறத்தலைப் பதிலாகக் கொடுப்பதற்கு நீங்கள் வெட்கப்பட வேண்டாமா?

உங்களுக்கு ஓர் உபகாரம் செய்த மனிதருக்கு நீங்கள் நன்றிக் கடன்பட்டிருக்கிறீர்கள் என்றால் அவரது விருப்பத்திற்கு மாறாகச் செயல்பட்டு அவருடன் மோதல் போக்கை மேற்கொள்ளவும் பகிரங்கமாக அவருக்கு முரண்பட்டு நடக்கவும் நீங்கள் வெட்கப்படுவீர்கள், இல்லையா?

அவ்வாறெனில் -நீங்கள் அனுபவிக்கும் ஒவ்வொரு கிருபையும் எந்த இரட்சகன் அருளியதோ- துன்பங்கள் உங்களை விட்டும் விலகுவது எந்த இரட்சகனின் கருணையோ அப்படிப்பட்ட மாபெரும் பேருபகாரியான இறைவனுடன் நீங்கள் இப்படி நடந்து கொள்வது முறையாகுமா? அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى : وَمَا بِكُمْ مِنْ نِعْمَةٍ فَمِنَ اللهِ ثُمَّ اِذَا مَسَّكُمُ الضُّرُّ فَاِلَيْهِ تَجْأَرُوْنَ (سورة النحل ، الأية :٥٣)

உங்களிடம் உள்ள அருட்கொடைகள்யாவும் அல்லாஹ்விடம் இருந்து வந்தவைதாம். பிறகு உங்களுக்கு ஏதேனும் துன்பம் வந்தால் அவனிடமே நீங்கள் முறையிடுகிறீர்கள்" (16 : 53)

அல்லாஹ்வுக்குச் செலுத்த வேண்டுமென எந்த ஓர் உரிமை மனிதர்கள் மீது விதிக்கப்பட்டதோ அது மிகவும் எளிதுதான். லேசானதுதான்! அதை எவருக்கு அல்லாஹ் இலகுவாக்கினானோ அவரைப் பொறுத்து இலகுவானதே! ஏனெனில் அல்லாஹ் அதில் எவ்வித சிரமத்தையும் நெருக்கடியையும் கஷ்டத்தையும் வைக்க வில்லை. - இன்னோரிடத்தில் அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى: وَجَاهِدُوْا فِى اللهِ حَقَّ جِهَادِهِ هُوَ اجْتَبَاكُمْ وَمَا جَعَلَ عَلَيْكُمْ فِى الدِّيْنِ مِنْ حَرَجٍ مِلَّةَ أَبِيْكُمْ اِبْرَاهِيْمَ هُوَ سَمَّاكُمُ الْمُسْلِمِيْنَ مِنْ قَبْلُ وَ فِى هَذَا لِيَكُوْنَ الرَّسُوْلُ شَهِيْدًا عَلَيْكُمْ وَ تَكُوْنُوْا شُهَدَاءَ عَلَى النَّاسِ فَأَقِيْمُوْا الصَّلاَةَ وَ آتُوْا الزَّكَاةَ وَ اعْتَصِمُوْا بِاللهِ هُوَ مَوْلاَكُمْ فَنِعْمَ الْمَوْلَى وَ نِعْمَ النَّصِيْرُ (سورة الحج ٧٨)

மேலும் அல்லாஹ்வின் பாதையில் எவ்வாறு ஜிஹாத் - அறப்போர் செய்ய வேண்டுமோ அவ்வாறு ஜிஹாத் செய்யுங்கள். அவன் (தனது) பணிக்காக உங்களைத் தேர்ந்தெடுத்துள்ளான். மேலும் தீனில்- இறைமார்க் கத்தில் உங்களுக்கு எவ்விதமான சிரமத்தையும் அவன் வைக்கவில்லை. உங்கள் தந்தை இப்ராஹீமின் மார்க்கத்தில் நிலைத்திருங்கள். அல்லாஹ்தான், உங்களுக்கு 'முஸ்லிம்கள்' என்று இதற்கு முன்பும் இ(ந்த வேதத்)திலும் பெயர் சூட்டியுள்ளான்., இந்தத் தூதர் உங்கள் மீது சான்று வழங்குபவராகவும் நீங்கள் பிற மக்கள் மீது சான்று வழங்குவோராகவும் திகழ வேண்டுமென்பதற்காக! எனவே தொழுகையை நிலைநாட்டுங் கள். ஜகாத் கொடுங்கள். மேலும் அல்லாஹ்வை உறுதியாகப் பற்றிக்கொள்ளுங்கள். அவன்தான் உங்கள் பாதுகாவலன். அவன் எத்துணை சிறந்த பாதுகாலவன்., எத்துணை சிறந்த உதவியாளன்" (22 : 78)

எத்துணை சிறந்த கொள்கை இது! சத்தியத்தை நம்புதலும், பயன்மிக்க நற்செயல்களும் எவ்வளவு உயர்வானவை! சிறப்பு மிக்க இந்தக் கொள்கையின் அடிப்படை, இறைவன் மீது அன்பு செலுத்துவதும் அவ னுக்குக் கண்ணியம் அளிப்பதும் ஆகும். அதன் நற்பயன் வாய்மையும் உறுதியான நிலைப்பாடுமாகும்.

ஒரு நாளைக்கு ஐவேளை தொழுவது கடமை. இந்தத் தொழுகைகள் மூலம் அடியார்களின் பாவங்களை அல்லாஹ் போக்குகிறான்., அவர்களின் அந்தஸ்துகளை உயர்த்துகிறான். அவற்றின் மூலம் இதயங்களையும் இவ் வுலக வாழ்வின் நிலைகளையும் போக்குகளையும் சீர்படுத்தவும் செய்கிறான்.

இந்தத் தொழுகைகளை மனிதன் முழுமையாக நிறைவேற்றிட வேண்டும்., அதுவும் தனது சக்திக்கு ஏற்ப நிறைவேற்ற வேண்டும் என்றுதான் கட்டளையிடப்படுகிறது! குர்ஆன் கூறுகிறது:

قال الله تعالى: فَاتَّقُوْا اللهَ مَا اسْتَطَعْتُمْ (سورة التغابن الآية: ١٦)

உங்களால் முடிந்த அளவு அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்" (64 : 16)

قال النبي ﷺ لعمران ابن حصين- وَكَانَ عِمْرَانُ مَرِيْضًا – صَلِّ قَائِماً فَإِنْ لَمْ تَسْتَطِعْ فَقَاعِدًا فَإِنْ لَمْ تَسْتَطِعْ فَعَلَى جَنْبٍ (رواه البخارى )

(நோயாளியாக இந்த) இம்றான் பின் ஹுஸைன் (ரலி) அவர்களுக்கு நபி(ஸல்) அவர்கள் சொன்னார் கள்: நீர் நின்று தொழும். அதற்கு உம்மால் இயலாவிட்டால் உட்கார்ந்து தொழும். அதற்கும் உம்மால் இயலாவிட்டால் ஒரு பக்கமாகப் படுத்துக் கொண்டு தொழும்" [1]

ஜகாத் என்பது உங்கள் செல்வத்திலிருந்து மக்களின் தேவைகளை முன்னிட்டு வழங்கும் சிறிதளவு தொகை யாகும். அதனை ஏழைகளுக்கும் வறியவர்களுக்கும் பயணிகளுக்கும் கடன்பட்டவர்களுக்கும் - ஜகாத் பெற்றிட தகுதியுடைய ஏனையோருக்கும் வழங்கிட வேண்டும்.

ஆண்டில் ஒரு மாதம் நோன்பு நோற்பது மற்றொரு கடமை. அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்:

قال الله تعالى: وَمَنْ كَانَ مَرِيْضًا أَوْ عَلَى سَفَرٍ فَعِدَّةٌ مِنْ أَيَامٍ أُخَرَ (البقرة :١٨٥)

ஷஒருவர் நோயாளியாகவோ பயணத்திலோ இருந்தால் அவர் வேறு நாட்களைக் கணக்கிட்டு நோற்றிட வேண்டும்" (2: 185)

முதுமை போன்ற இயலாமையினால் நோன்பு நோற்க இயலாதவர் ஒவ்வொரு நாளுக்கும் ஓர் ஏழைக்கு உணவு வழங்கிட வேண்டும்.

---

[1] புகாரி. பாகம்: தொழுகையைச் சுருக்குவது தொடர்பான விஷயங்கள். பாடம்: உட்கார்ந்து தொழுதிட இயலவில்லையானால் ஒரு பக்கமாகப் படுத்துக்கொண்டு தொழட்டும். (1117)

சங்கைக்குரிய இறையில்லம் கஅபாவை ஆயுளில் ஒருமுறை ஹஜ் செய்வது சக்தியுள்ளவருக்கு கடமை.

இவைதான் அல்லாஹ்வுக்குச் செலுத்தும் உரிமைகளின் அடிப்படைகள். இவை தவிர, ஜிஹாத் செய்வது போன்று - தற்காலிகச் சூழ்நிலைகளை முன்னிட்டு விதிக்கப்படும் கடமைகள் உள்ளன. அநீதிக்குள்ளான வருக்கு உதவி செய்வது போன்று-சில காரணங்களை முன்னிட்டு வலியுறுத்தப்படும் கடமைகளும் உள்ளன.

சிந்தித்துப் பாருங்கள்! சகோதரரே! அல்லாஹ்வுக்கு நம் மீதுள்ள இவ்வுரிமைகளை நிறைவேற்றுவது எளிதானது., கூலியோ மிக அபரிமிதமானது. தொடர்ந்து இவற்றை நீங்கள் நிறைவேற்றி வந்தால் இவ்வுல கத்திலும் மறுவுலகத்திலும் பெரும் பாக்கியம் பெற்றுத் திகழ்வீர்கள். மேலும் நரகத்தில் இருந்து ஈடேற்றம் அடைந்து சுவனபதி செல்வீர்கள். குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى : فَمَنْ زُحْزِحَ عَنِ النَّارِ وَاُدْخِلَ الْجَنَّةَ فَقَدْ فَازَ وَمَا الْحَيَاةُ الدُّنْيَا اِلاَّ مَتَاعُ الْغُرُوْرِ (آل عمران الآية: ١٨٥)

(மறுவுலகில்) எவன் நரக நெருப்பிலிருந்து காப்பாற்றப்பட்டு சுவனபதியில் நுழைவிக்கப்படுகிறானோ அவனே உண்மையில் வெற்றி பெற்றவன். இவ்வுலக வாழ்வு என்பது ஏமாற்றும் அற்ப இன்பமே தவிர வேறில்லை" (3 : 185)

## 2. இறைத்தூதருக்குச்
## செய்ய வேண்டிய கடமைகள்

இறைத்தூதருக்குரிய உரிமைதான் படைப்பினங்களுக் குச் செலுத்த வேண்டிய உரிமைகளிலேயே மிகவும் மகத் தானது. நபி (ஸல்) அவர்களுக்கு நம் மீதுள்ள உரிமை போன்று வேறு எவருக்கும் நம்மீது உரிமை இல்லை. நபியவர்களுக்கு நாம் கடமைப்பட்டிருப்பதுபோன்று வேறு எந்த மனிதருக்கும் நாம் கடமைப் பட்டிருக்கவில்லை. அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى : اِنَّا اَرْسَلْنَاكَ شَاهِدًا وَ مُبَشِّرًا وَنَذِيْرًا لِتُؤْمِنُوْا بِاللهِ وَ رَسُوْلِهِ وَتُعَزِّرُوْهُ وَتُوَقِّرُوْهُ (الفتح :٨ –٩)

(நபியே) நாம் உம்மைச் சான்று வழங்குபவராகவும் நற்செய்தி அறிவிப்பவராகவும் எச்சரிக்கை செய்ப வராகவும் அனுப்பியிருக்கிறோம். எதற்காகவெனில் (மக்களே!) நீங்கள் அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதர் மீதும் நம்பிக்கை கொள்வதற்குத்தான்! நீங்கள் அவருக்கு (தூதருக்கு) உறு துணையாக இருப்பதற்காகவும் அவரைக் கண்ணியப்படுத்துவதற்காகவும்தான்" (48 : 8 - 9)

ஏனைய எல்லா மனிதர்கள் மீதான அன்பைக் காட்டிலும் நபியின் மீதான அன்புக்கு முன்னுரிமை அளிப்பது கடமை. எந்த அளவுக்கு எனில் ஒரு மனிதன் தனது நலனை விடவும் தன்னுடைய பிள்ளைகள், பெற்றோர் களை விடவும் நபியின் மீது செலுத்தும் அன்புக்குத்தான் முதலிடம் கொடுத்திட வேண்டும். நபியவர்கள் அருளினார்கள்:

قال النبي ﷺ : لاَ يُؤْمِنُ اَحَدُكُمْ حَتَّى اَكُوْنَ أَحَبَّ اِلَيْهِ مِنْ وَلَدِهِ وَوَالِدِهِ وَالنَّاسِ أَجْمَعِيْنَ

தன் பிள்ளைகளை விடவும், பெற்றோரை விடவும் ஏனைய மக்கள் அனைவரை விடவும் அதிகமாக என் மீது அன்புசெலுத்தாத வரையில் உங்களில் எவரும் நம்பிக்கை யாளராக ஆக முடியாது" [2]

நபி (ஸல்) அவர்களுக்குச் செலுத்தும் உரிமைகளில் மற்றொன்று, அவர்களுக்கு உரிய முறையில் - எவ்வித மிகைபாடோ குறைபாடோ இன்றி - கண்ணியம் அளிப்பதும் மரியாதை செய்வதும் ஆகும்.

அவர்களின் வாழ்நாளில் அவர்களுக்குக் கண்ணியம் அளிப்பதெனில் அவர்களின் ஸு ன்னத்- நடைமுறை களுக் கும் அவர்களின் சங்கைக்குரிய ஆளுமைக்கும் கண்ணியம் அளிப்பதாகும்.

அவர்களின் மரணத்திற்குப் பின் அவர்களுக்குக் கண்ணியம் அளிப்பதெனில் அவர்களின் ஸு ன்னத் எனும் வழிமுறைகளுக்கும் அவர்கள் வழங்கிய சீர்மிகு ஷரீஅத் - சட்டங்களுக்கும் கண்ணியம் அளிப்பதாகும்.

நபி(ஸல்)அவர்களுக்கு அவர்களின் அன்புத் தோழர்கள் அளித்த கண்ணியத்தையும் மரியாதையையும் அறி பவர் அதன் உண்மை நிலையைத் தெரிந்து கொள்வார். சிறப்புக்கும் உயர்வுக்கும் உரிய தோழர்கள் நபி (ஸல்)அவர்களுக்கு எவ்வாறு மரியாதை செய்து தங்கள் மீதான கடமையை நிறைவேற்றினார்கள் என்பதைப் புரிந்து கொள்வார்.

ஹு தைபிய்யா உடன்படிக்கையின் வரலாற்றில் இந்த உண்மை இடம் பெற்றுள்ளது. அதாவது நபி(ஸல்) அவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்துவதற்காக குறைஷி குலத்தினர் அனுப்பி வைத்த உர்வா பின் மஸ்ஊத்

---

[2] **புகாரி, பகுதி: ஈமான். பாடம்: நபி (ஸல்) அவர்களை நேசிப்பது ஈமானைச் சேர்ந்தது. (எண் 15) முஸ்லிம், பகுதி: ஈமான். பாடம்: குடும்பத்தினர், பிள்ளைகள், மக்கள் அனைவரையும் விட அதிகமாக நபி (ஸல்) அவர்களை நேசிப்பது கடமை (எண் 44)**

என்பவர் திரும்பி வந்து கூறினார்: ரோம், பாரசீக, அபீனீனிய மன்னர்களிடம் நான் சென்றுள்ளேன். முஹம் மதின் தோழர்கள் முஹம்மத் (ஸல்) அவர்களுக்குக் கண்ணியம் அளித்ததுபோன்று எந்த மன்னருக்கும் அவருடைய தோழர்கள் கண்ணியம் அளிக்க நான் காணவில்லை. அவர், அவர்களுக்கு ஏதேனும் கட்டளை யிட்டால் அதனை நிறைவேற்ற அவர்கள் விரைகிறார்கள். அவர் உளு செய்யும் பொழுது அவர் உளு செய்த நீரைப் பிடிக்கச் சண்டை போடுகிறார்கள். அவர் பேசினால் தங்களது குரல்களை அவரிடத்தில் தாழ்த்து கிறார்கள். அவர்கள் அவரைக்கூர்ந்து பார்ப்பதே இல்லை. அதன் நோக்கம் அவருக்குக் கண்ணியம் அளிப்பதே யாகும்"

இவ்வாறுதான் நபித்தோழர்கள் நபி (ஸல்) அவர்களுக்குக் கண்ணியம் அளித்துவந்தார்கள். அதே நேரம் அல்லாஹ்வும் நபியவர்களின் இயல்பில் - மென்மை, இளகிய மனம் போன்ற மிக்க மேலான குணநலன் களையே அமைத்திருந்தான். கடுகடுப்பானவராகவும் வன்நெஞ்சராகவும் அவர்கள் இருந்திருந்தால் அவர் களை விட்டும் தோழர்கள் விலகிச் சென்றிருப்பார்கள்.

நபியவர்களுக்கு நம் மீதுள்ள மற்றோர் உரிமை என்ன வெனில், கடந்தகால, வருங்கால நிகழ்வுகளைப் பற்றி அவர்கள் அறிவித்த செய்திகளை நாம் உண்மைப் படுத்திட வேண்டும். அவர்கள் பிறப்பித்த கட்டளை களுக்கு நாம் கீழ்ப்படிந்திட வேண்டும். அவர்கள் விலக்கிய - கண்டித்த தீமைகளை விட்டும் நாம் விலகிட வேண்டும். மேலும் அவர்களின் வழிகாட்டல்தான் நிறைவான வழிகாட்டல் என்றும் அவர்கள் வகுத்தளித்த ஷரீஅத் சட்டங்கள்தாம் பூரணமானவை என்றும் நம்புவதுடன் அவற்றை விடுத்து வேறு எந்தச் சட்ட திட்டங் களுக்கும் வாழ்க்கை முறைமைக்கும் நாம் முன்னுரிமை அளிக்கக்கூடாது.

قال الله تعالى : فَلاَ وَرَبِّكَ لاَ يُؤْمِنُوْنَ حَتَّى يُحَكِّمُوْكَ فِيْمَا شَجَرَ بَيْنَهُمْ ثُمَّ لاَ يَجِدُوْا فِىۤاَنْفُسِهِمْ حَرَجًا مِمَّا قَضَيْتَ وَيُسَلِّمُوْا تَسْلِيْمًا (سورة النساء الآية: ٦٥)

அவ்வாறில்லை. (முஹம்மதே!) உம் இறைவன் மீது சத்தியமாக! இவர்கள் தங்களுக்கிடையே ஏற்பட்ட பிணக்குகளில் உம்மை நீதிபதியாக ஏற்றுக்கொண்டு பின்னர் நீர் அளிக்கும் தீர்ப்பு குறித்து தமது உள்ளங் களில் எத்தகைய அதிருப்தியும் கொள்ளாமல் முற்றிலும் அதற்கு அடிபணியாத வரையில் இவர்கள் நம்பிக்கை கொண்டவர்களாக ஆக முடியாது" (4 : 65) மேலும் அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى : قُلْ اِنْ كُنْتُمْ تُحِبُّوْنَ اللهَ فَاتَّبِعُوْنِ يُحْبِبْكُمُ اللهُ وَ يَغْفِرْ لَكُمْ ذُنُوْبَكُمْ وَاللهُ غَفُوْرٌ رَّحِيْمٌ (آل عمران الآية: ٣١)

(நபியே!) கூறுவீராக: நீங்கள் அல்லாஹ்வை நேசிப்பவர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள்., அல்லாஹ் உங்களை நேசிப்பான். மேலும் உங்கள் பாவங்களையும் மன்னிப்பான். அல்லாஹ் பெரிதும் மன்னிப்பவன். பெரும் கிருபையாளன்" (3 : 31)

நபி (ஸல்) அவர்களுக்கு நம் மீதுள்ள உரிமைகளில் இன்னோர் உரிமை என்னவெனில், அவர்கள் வகுத்துத் தந்த ஷரீஅத்திற்கும் வழங்கிய வழிகாட்டலுக்கும் பாது காப்பு நல்கிட வேண்டும். நிலைமைகளின் தேட்டத்திற்கு ஏற்ப மனிதன் தன்னிடமுள்ள சக்திகளைப் பயன்படுத்தி இந்தப் பாதுகாப்பை அளித்திட வேண்டும்.

எதிரிகள் ஆதாரங்களை அளித்தும் ஐயங்களை உருவாக்கியும் நபியின் வழிகாட்டல் மீது தாக்குதல் தொடுகிறார்கள் என்றால் நாம் அறிவின் அடிப்படையிலும் எதிரியின் ஆதாரங்களைத் தகர்த்து ஐயங்களை அகற்றுவது கொண்டும் அவற்றின் குழப்பங்களைக் கோடிட்டுக் காட்டுவதுகொண்டும் இஸ்லாத்திற்கு பாது காப்பு அளித் திட வேண்டும்.

ஆயுதங்கள் - கருவிகளைக்கொண்டும் எதிரிகள் தாக்கு தல் தொடுத்தால் ஆயுதங்களின் மூலம் தற்காப்பை மேற் கொள்ள வேண்டும்.

நபியவர்களின் ஷரீஅத்தின் மீதோ அவர்களின் தனிப்பட்ட ஆளுமையின் மீதோ எதிரிகள் தாக்குதல் தொடுத்தால், முஸ்லிம்கள் அதைக் கேட்டுக்கொண்டிருக்க முடியாது. தக்க பாதுகாப்பு அளிக்க சக்தி பெற்றிருந்தும் பதிலடி கொடுக்காமல் வாளாவிருக்க முடியாது.

## 3 - பெற்றோருக்குச் செய்ய வேண்டிய கடமைகள்

பெற்றோருக்குரிய சிறப்பையும் உரிமைகளையும் யாரும் மறுக்க முடியாது. பெற்றோர் இருவரும்தான் பிள்ளையின் வாழ்வுக்குக் காரணம். அவ்விருவருக்கும் பிள்ளையின் மீது அதிக உரிமை உள்ளது. சிறு வய தில் அவனை அவ்விருவரும்தான் பராமரித்துப் பாதுகாத்தனர். அவனது நிம்மதிக்காக அவ்விருவரும் சிரமப் பட்டனர். அவன் தூங்க வேண்டும் என்பதற்காக தங்களது தூக்கத்தைத் தியாகம் செய்தனர்.

குழந்தையாக இருந்த உங்களை, உங்கள் தாய், தனது வயிற்றில் சுமந்திருந்தாள். அப்போது அவளது உணவின் மூலம்தான் - அவளது ஆரோக்கியத்தின் மூலம்தான் நீங்கள் உயிர் வாழ்ந்தீர்கள். இவ்வாறு பெரும்பாலும் ஒன்பது மாதங்கள் கழிந்தன. இதையே இந்த வசனத்தில் அல்லாஹ் இப்படிச் சுட்டிக் காட்டுகிறான்:

قال الله تعالى: **حَمَلَتْهُ أُمُّهُ وَهْنًا عَلى وَهْنٍ** (لقمان : ١٤)

அவனது தாய் நலிவுக்கு மேல் நலிவுற்று அவனைத் தனது வயிற்றில் சுமந்தாள்" (31 : 14)

பிறகு அவள் பெரும் சிரமத்தையும் களைப்பையும் துன்பத்தையும் தாங்கிக் கொண்டு இரண்டு வருடங்கள் (குழந்தையாகிய) உங்களுக்குப் பாலூட்டிப் பராமரித்து வளர்க்கிறாள். தந்தையும் அவ்வாறுதான் உங்களை - குழந்தைப் பருவம் முதல் நீங்கள் சொந்தக் காலில் நின்று வாழும் காலம் வரைக்கும் சீரோடும் சிறப் போடும் நீங்கள் வளர்ந்து வருவதற்காக ஓடியாடி உழைக்கிறார். உங்களுக்கு கல்வியும் நல்லொழுக்க மும் நல்வழிகாட்டலும் அளிப்பதற்காக ஓய்வின்றி பாடுபடுகிறார். அந்நேரம் உங்களுக்கு நீங்களே நன்மையோ தீமையோ லாபமோ நஷ்டமோ செய்துகொள்ள எந்த சக்தியும் உங்களுக்கு இல்லாதிருந்தது. இதனால் தான் பெற்றோர் இருவருக்கும் நல்லுபகாரம் செய்யும்படி-நன்றி செலுத்தும்படி அல்லாஹ் கட்டளையிடுகிறான்.

**قال الله :وَوَصَّيْنَا الانْسَانَ بِوَالِدَيْهِ حَمَلَتْهُ أُمُّهُ وَهْنًا عَلى وَهْنٍ، فِصَالُهُ فِي عَامَيْنِ اَنِ اشْكُرْ لِي وَلِوَالِدَيْكَ ، اِلَيَّ الْمَصِيْرُ (سورة الآية لقمان ١٤)**

மேலும் பெற்றோர் நலன் பேண வேண்டுமென நாம் மனிதனுக்கு அறிவுறுத்தினோம். அவனுடைய தாய் நலி வுக்கு மேல் நலிவை ஏற்று அவனைத் தன் வயிற்றில் சுமந்தாள். மேலும் அவன் பால்குடி மறக்க இரண்டாண் டுகள் பிடித்தன. (எனவே அவனுக்கு அறிவுரை கூறினோம்:) எனக்கு நன்றி செலுத்து., உன் பெற்றோருக் கும் நன்றி செலுத்து. மேலும் (அனைவரும்) என்னிடமே திரும்பி வர வேண்டியுள்ளது என்று" (31 : 14) மற்றோர் இடத்தில்,

**قال الله تعالى : وَبِالْوَالِدَيْنِ اِحْسَانًا اِمَّا يَبْلُغَنَّ عِنْدَكَ الْكِبَرَ أَحَدُهُمَا اَوْ كِلاَهُمَا فَلاَ تَقُلْ لَهُمَا اُفٍّ وَلاَ تَنْهَرْهُمَا وَ قُل لَّهُمَا قَـوْلاً كَرِيْمًا وَاخْفِضْ لَهُمَا جَنَاحَ الذُلِّ مِنَ الرَّحْمَةِ وَ قُل رَّبِّ ارْحَمْهُمَا كَمَا رَبَّيَانِي صَغِيْرًا** (سورة الاسراء ٢٣-٢٤ )

மேலும் தாய்தந்தையரிடம் மிகவும் கண்ணியமான முறையில் நடந்துகொள்ளும். பெற்றோரில் ஒருவரோ இருவருமோ முதுமை அடைந்த நிலையில் உம்மிடம் இருந்தால் அவர்களைச் சீ என்றுகூட கூறாதீர். மேலும் அவர்களைக் கண்டித்துப் பேசாதீர். மாறாக அவர்களிடம் கண்ணியமான வார்த்தைகளைப் பேசுவீராக. மேலும் பணிவுடனும் கருணையுடனும் அவர்களிடம் நடந்து கொள்வீராக. மேலும் என் இறைவா! சிறுவயதில் என்னை அவர்கள் கருணையுடனும் பாசத்துடனும் வளர்த்தது போன்று நீ அவர்கள் மீது கருணை புரிந்திடு என இறைஞ்சிய வண்ணம் இருப்பீராக" (17: 23 - 24)

பெற்றோர் இருவருக்கும் நீங்கள் செய்ய வேண்டிய கடமை, அவர்களிடம் நீங்கள் அன்புடனும் கனிவுடனும் நடந்து கொள்ள வேண்டும். சொல், செயல் ரீதியிலும் நல்லுபகாரம் செய்திட வேண்டும். அவர்களுக்குப் பணம் வழங்கியும் பணிவிடை செய்தும் நல்லுதவி புரிய வேண்டும். அவ்விருவரின் சொல் - அல்லாஹ்வுக்குப் பாவமாகவும் உங்களுக்குத் தீங்காகவும் இல்லாதிருக்கும் பட்சத்தில் - அதற்கு நீங்கள் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும். மேலும் அவ்விருவரிடமும் நீங்கள் கனிவாகப் பேசிட வேண்டும்.

முகமலர்ச்சியுடன் அவர்களிடம் நடந்துகொள்ள வேண்டும். முறையான பணிவிடைகளை அவர்களுக்கு அளித்திட வேண்டும். அவ்விருவரின் முதுமை, இயலாமை மற்றும் பலவீனம் ஆகியவற்றால் எந்தச் சிரமத்தை யும் உள்ளத்தில் நீங்கள் உணராதிருக்க வேண்டும். அவர்களைப் பெரும் பாரமாக நீங்கள் கருதிடக் கூடாது.

அவ்விருவரின் இன்றைய நிலைமைக்கு எதிர்காலத்தில் நீங்களும் உள்ளாகலாம். இன்று அவ்விருவரும் தாய் - தந்தை என்பதுபோல் அன்று நீங்களும் தாய் தந்தை ஆகலாம். உங்கள் பெற்றோர் முதுமை கால கட்டத்தில் உங்களிடம் தங்கியிருப்பது போன்று - நீண்ட ஆயுள் உங்களுக்கு எழுதப்பட்டிருந்தால் - நீங்க ளும் முதுமை அடைந்து உங்கள் பிள்ளைகளின் தயவில் தங்கிவாழும் சூழ்நிலைக்கு உள்ளாகலாம். உங்கள் பிள்ளைகளின் அன்பும் அரவணைப்பும் உங்களுக்குத் தேவைப்படலாம்., உங்களது அன்பும் அரவணைப்பும் இப்பொழுது உங்கள் தாய் தந்தையருக்கு தேவை என்பது போன்று!

எனவே நீங்கள் உங்கள் பெற்றோரை அன்புடன் ஆதரித்தால் அதற்கான மகத்தான நற்கூலியும் உங்களுக்கு உண்டு.,அத்துடன் உங்கள் முதுமைக் காலத்தில் உங்கள் பிள்ளைகளின் கவனிப்பும் நல்லாதரவும் உங்களுக்குக் கிடைக்கும். இத்தகைய நற்செய்தி மூலம் மகிழ்வு கொள்ளுங்கள்!

ஒருவர் தன் பெற்றோரை நல்ல முறையில் கவனித்தால் அவருடைய பிள்ளைகள் நல்ல முறையில் அவரைக் கவனிப்பார்கள். ஆனால் பெற்றோரை நிந்தித்தால் அவருடைய மக்கள் அவரை நிந்திக்கும் நிலைதான் வரும். செயல் என்னவோ அதற்கேற்பதான் கூலியும் அமையும். நீங்கள் நடந்து கொள்வது எப்படியோ அப்படியேதான் நடத்தப்படுவீர்கள்!

பெற்றோரின் உரிமைக்கு மிகப் பெரிய, உன்னத உயர் அந்தஸ்தை அல்லாஹ் வழங்கியுள்ளான். அவனுடைய (தூதரின் உரிமையையும் உள்ளடக்கிய அவனது) உரிமையின் அடுத்த அந்தஸ்தைத் தாய் தந்தையின் உரிமைக்கு அளித்துள்ளான்.

قال الله تعالى : اَنِ اشْكُرْ لِى وَلِوَالِدَيْكَ (لقمان ١٤)

எனக்கு நன்றி செலுத்துவாயாக. மேலும் உன் பெற்றோருக்கும் நன்றி செலுத்துவாயாக" (31 : 14)

அண்ணல் நபி (ஸல்)அவர்கள், அல்லாஹ்வின் பாதையில் ஜிஹாத் செய்வதைக் காட்டிலும் பெற்றோரிடம் அன்புடன் நடந்துகொள்வதற்கு முன்னுரிமை அளித்துள்ளார்கள்.

இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்களின் ஓர் அறிவிப்பில் உள்ளது: அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ்வுக்கு மிகவும் பிரியமான அமல் எது?என்று நான் நபியவர்களிடம் கேட்டேன். அதற்கு நபி (ஸல்)அவர்கள் கூறினார்கள்: நேரப்படி தொழுவது. பிறகு எது? என்று மீண்டும் கேட்டேன். பெற்றோருக்குப் பணிவிடைசெய்வது என்று கூறினார்கள். 'பிறகு எது?' என்று மீண்டும் கேட்டேன். அதற்கு 'இறைவழியில் ஜிஹாத் செய்வது' என்று கூறினார்கள்" [3]

இது, தாய் தந்தைக்குச் செலுத்த வேண்டிய உரிமை யின் முக்கியத்துவத்தைக் காட்டுகிறது. ஆனால் பெரும் பாலான மக்கள் இந்த உரிமையைப் பாழாக்கிவிட்டார்கள். நிந்தித்தல்,உறவைத் துண்டித்தல் என்பது வரை சென்று விட்டார்கள். பெற்றோருக்குத் தன் மீது எந்த உரிமையும் இல்லை என்று சிலர் கருதுவதை நீங்கள் பார்க்கலாம். அவ்விருவரையும் கேவலமாகவும் இழிவாகவும் கருதுகிறார்கள். அவர்களிடம் ஆணவமாக நடந்து கொள்கிறார்கள். இப்படிச்செய்வோர் அதற்கான கூலியை உடனடியாகவோ தாமதமாகவோ நிச்சயம் பெற்றே ஆக வேண்டும்.

## 4 - பிள்ளைகளுக்குச்
## செய்ய வேண்டிய கடமைகள்

பிள்ளைகள் என்பது ஆண் மக்களையும் பெண் மக்களையும் குறிக்கும். பிள்ளைகளுக்குச் செய்ய வேண்டிய கடமைகள் ஏராளம் உள்ளன. அவற்றில் மிக முக்கியமானது அவர்களுக்கு நற்கல்வியும் நல்லொழுக்கமும் அளிப்பதாகும்.

நல்லொழுக்கம் அளிப்பதென்றால் அவர்களின் உள்ளங்களில் தீன் - இறைமார்க்கத்தின் பற்றையும் நற்குணங் களையும் விதைத்து வளர்ப்பதாகும். இந்தத் துறையில் அவர்கள் பெரும்அளவு வல்லமை பெற்றுத் திகழ்வதற்கு அது வழிவகுக்கும்! அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى : يَا اَيُّهَا الَّذِيْنَ آمَنُوْا قُوْا اَنْفُسَكُمْ وَ اَهْلِيْكُمْ نَارًا ، وَقُوْدُ هَا النَّاسُ وَ الْحِجَارَةُ (سورة التحريم : ٦)

இறைநம்பிக்கையாளர்களே! மனிதர்களும் கற்களுமே அதன் எரிபொருளாக இருக்குமே அப்படிப்பட்ட நரக நெருப்பில் இருந்து உங்களையும் உங்கள் குடும்பத்தாரையும் காப்பாற்றிக் கொள்ளுங்கள் " (66 : 6)

قال النبي ﷺ :كُلُّكُمْ رَاعٍ وَكُلُّكُمْ مَسْؤُوْلٌ عَنْ رَعِيَّتِهِ وَالرَّجُلُ رَعٍ فِى أَهْلِهِ وَ مَسْؤُوْلٌ عَنْ رَعِيَّتِهِ

நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: நீங்கள் ஒவ் வொருவரும் கண்காணிப்பாளரே! தனது கண்காணிப்பின் கீழ் உள்ளவர் பற்றி உங்கள் ஒவ்வொருவரிடமும் விசாரணை செய்யப்படும். ஒரு மனிதன் தன் குடும்பத்தினர் விஷயத்தில் கண்காணிப்பாளன் ஆவான். அவனது கண்காணிப்பின் கீழ் உள்ளவர் பற்றி அவனிடம் விசா ரணை செய்யப்படும்" [4]

---

[3] புகாரி, பகுதி: தொழுகைக்கான நேரங்கள். பாடம்: நேரப்படி தொழுவதன் சிறப்பு (எண் 527) முஸ்லிம். பகுதி: ஈமான். பாடம்: அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்வது சிறந்த அமல் என்பதன் விளக்கம் எண் 85)

[4] புகாரி. பகுதி: ஜு ம்ஆ. பாடம்: கிராமங்களில், நகரங்களில் ஜு ம்ஆ (எண் 893) முஸ்லிம், பகுதி: ஆட்சி அதிகாரம். பாடம்: நீதமிக்க தலைவரின் சிறப்பும் அநீதியாளனின் தண்டனையும் (எண் 1827)

பிள்ளைகள், பெற்றோரிடம் ஒப்படைக்கப்பட்ட அமானிதமாக உள்ளனர். மறுமை நாளில் பிள்ளைகள் பற்றி பெற்றோரிடம் விசாரணை செய்யப்படும். இறைமார்க்கக் கல்வியும் நல்லொழுக்கமும் ஊட்டி நற்பயிற்சி அளிப்பதன் மூலம்தான் பிள்ளைகள் தொடர்பான இந்தப் பொறுப்பில் இருந்து பெற்றோர் விடுபடமுடியும். அதன் மூலம் பிள்ளைகளும் நல்லோராக வளர்ந்து வருவர். இம்மையிலும் மறுமையிலும் பெற்றோருக்குக் கண் குளிர்ச்சியாக அமைவர். அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى : وَالَّذِيْنَ آمَنُوْا وَاتَّعَتْهُمْ ذُرِّيَّتُهُمْ بِاِيْمَانٍ اَلْحَقْنَا بِهْمْ ذُرِّيَّتَهُمْ وَمَا اَلَتْنَاهُمْ مِّنْ عَمَلِهِمْ مِنْ شَيْءٍ ، كُلُّ امْرِءٍ بِمَا كَسَبَ رَهِيْنٍ (الطور ٢١)

எவர்கள் இறைநம்பிக்கை கொண்டார்களோ அவர்களையும் - இறைநம்பிக்கையில் அவர்களைப் பின்பற்றிய அவர்களின் வழித்தோன்றல்களையும் (சுவனத்தில்) நாம் ஒன்றுசேர்ப்போம். மேலும் அவர்களின் செயல்களில் எந்த இழப்பையும் அவர்களுக்கு ஏற்படுத்த மாட்டோம். ஒவ்வொரு மனிதனும் தான் சம்பாதித்தவற்றின் பேரில் பணயம் ♦ வைக்கப்பட்டிருக்கிறான்" (52 : 21)

قال النبي ﷺ :اِذَا مَاتَ ابْنُ آدَمَ انْقَطَعُ عَنْهُ عَمَلُهُ اِلاَّ مِنْ ثَلاَثٍ صَدَقَةٍ جَارِيَةٍ اَوْ عِلْمٍ يُنْتَفَعُ بِهِ اَوْ وَلَدٍ صَالِحٍ يَدْعُوْ لَهُ

மனிதன் இறந்துவிட்டால் அவனுக்கும் அவனுடைய அமலுக்கும் தொடர்பு இல்லாமலாகி விடுகிறது,. மூன்றைத் தவிர! நீடித்த நிலையான தர்மம், பயன் அளித்துக் கொண்டிருக்கும் கல்வி, அவனுக்காகப் பிரார்த்தனை செய்யும் பிள்ளைகள்" [5]

பிள்ளைகளுக்கு நற்பயிற்சி அளிப்பதன் நற்பயனாகும் இது. பிள்ளைகள் நற்கல்வி பெற்று நல்ல பண்புகளை உடையவர்களாய் வளர்த்து வந்தால் அது பெற்றோருக்கே நற்பயன் அளிக்கும்., மரணத்திற்குப் பிறகு வரும் வாழ்க்கையிலும்கூட அதன் பயன் நீடிக்கும்!

பெற்றோரில் பெரும்பாலோர் இந்தக் கடமையைச் சாதாரணமாகக் கருதிவிட்டனர்., தங்கள் பிள்ளைகளைப் பாழாக்கிவிட்டனர்., அவர்களை மறந்தே போய் விட்டனர். பிள்ளைகள் விஷயத்தில் அவர்களுக்கு எந்தப் பொறுப் பும் இல்லை என்பதுபோல் உள்ளனர். பிள்ளைகள் எங்கே போனார்கள்? எப்பொழுது வருவார்கள்? அவர்களின் நண்பர்கள் யார்? யார் யாருடன் அவர்கள் பழகுகிறார்கள்? என்பது பற்றி அவர்கள் விசாரிப்பதே கிடையாது. நன்மையின் பக்கம் அவர்களைத் திருப்புவதில்லை. தீமையை விட்டும் அவர்களைத் தடுப்பதில்லை.

ஆச்சரியம் என்னவெனில், இப்படிப்பட்டவர்கள் தங்கள் சொத்துகள் மீது அதிக அளவு பேராசை கொண்டிருக்கிறார்கள். அவற்றைப் பாதுகாப்பதிலும் பல்கிப்பெருகச் செய் வதிலும் அவற்றைச் சீராகப் பராமரிப்பதிலும் வழித்திருந்து ஈடுபாடுகொள்கிறார்கள். இவ்வாறு அவர்கள் அந்தச் சொத்துக்களை பராமரித்துப் பெருகச் செய்வதன் பலன், பெரும்பாலும் அடுத்தவரைச் சென்றடைகிறது என்பதுடனே இப்படிச் செய்கிறார்கள். பிள்ளைகளுக்கோ எந்த முக்கியத்துவமும் அவர்கள் கொடுப்பதில்லை. ஆனால் பிள்ளைகளைப் பேணிப் பாதுகாப்பதுதான் மிகவும் ஏற்றமானது. இவ்வுலகிலும் மறு உலகிலும் அதிகப் பயன் அளிக்கக் கூடியது.

உணவு பானம் அளித்து மகனின் உடலுக்கு ஊட்டம் அளிப்பதும் ஆடைகள் அளிப்பதும் தந்தை மீது கடமை என்பதுபோல் கல்வி மற்றும் ஈமான் மூலம் அவனது இதயத்திற்கு ஊட்டச்சத்து அளிப்பதும் அவனது ஆன்மாவுக்கு தக்வா (இறையச்சம்) எனும் ஆடையை அணிவிப்பதும் அவர் மீது கடமையாகும். அந்த ஆடைதான் சிறந்ததாகும்.

பிள்ளைகளுக்குச் செய்யவேண்டிய மற்றோர் உரிமை, மிகைபாடும் குறைபாடுமின்றி நல்லமுறையில் அவர்களுக்காகச் செலவு செய்வதாகும்.

அன்பளிப்புகள், வெகுமதிகள் விஷயத்தில் பிள்ளைகளில் ஒருவரை விட மற்றொருவருக்கு முன்னுரிமை அளிக்காதிருப்பதும் அவர்களின் உரிமைகளில் உள்ளதுதான். ஒரு பொருளை ஒருவருக்குக் கொடுத்து விட்டு ஒருவருக்குக் கொடுக்காதிருப்பது கூடாது. நிச்சயமாக அது அநீதியாகும். நீதிக்குப் புறம்பானதாகும். அநீதியா ளர்களை அல்லாஹ் நேசிப்பதில்லை. அது மட்டுமல்ல அன்பளிப்பு கிடைக்காத பிள்ளைகளின் உள்ளத்தில் அது வெறுப்பை ஏற்படுத்தும். அவர்களுக்கும் பெற்றோருக்கும் பகைமை உருவாகச் செய்யும்.

---

♦ **கடனைத் திருப்பிச் செலுத்தாமல் அடகுப்பொருளை மீட்க முடியாது என்பதுபோல் எந்த மனிதனும் தனது கடமையை நிறைவேற்றாமல் தன்னைத்தானே அல்லாஹ்வின் தண்டனையிலிருந்து காத்துக்கொள்ள முடியாது. (மொழிபெயர்த்தோன்)**

[5] **முஸ்லிம். பகுதி: மரணசாஸனம், பாடம்: ஒரு மனிதன் மரணம் அடைந்த பிறகு அவனைச் சென்றடையும் நன்மை (எண் 1631)**

மக்களில் சிலரைப் பார்க்கலாம். பிள்ளைகளில் ஒருவர் பெற்றோருக்குப் பணிவிடை செய்வதிலும் கவனிப் பதிலும் மற்றபிள்ளைகளைக் காட்டிலும் சிறப்புற்று விளங்குவார். அந்த மகன் செய்கிற பணிவிடைக்கும் பராமரிப்புக்கும் கைமாறாக சிறப்பு அன்பளிப்புகளை தந்தை வழங்குவதைக் காணலாம்.

ஆனாலும் ஒரு மகனிடம் உள்ள தனித்தன்மையைக் காட்டிப் பிள்ளைகளிடையே பெற்றோர் காட்டும் பாகு பாட்டை நியாயப்படுத்தக் கூடாது. பெற்றோரை அவர் நன்கு கவனித்துக்கொள்கிறார் என்பதற்காக அவ ருக்குச் சிறப்பு அன்பளிப்பு வழங்கக்கூடாது. ஏனெனில் பெற்றோ ரைக் கவனிப்பதற்கான கூலியை அல்லாஹ் வழங்கு வான். அது அவனது பொறுப்பில் உள்ளது. மேலும் பெற்றோரை நன்கு கவனித்துக் கொள்ளும் மகனுக்குச் சிறப்பு அன்பளிப்புச் செய்வது தனது பணிவிடை குறித்து அவனை தற்பெருமை கொள்ளச் செய் யும். தனக்கெனத் தனிச்சிறப்பு உள்ளதெனக் கருதுவான். மேலும் அது மற்ற மகனுக்கு வெறுப்பூட்டும். அவன் தொடர்ந்து தந்தையை நிந்தித்துக் கொண்டிருப்பான்.

பின்னர் என்ன நடக்கும் என்பதை நிச்சயமாக நாம் அறியோம். சூழ்நிலைகள் மாறலாம். பெற்றோரை நன்கு கவனிக்கும் மகன் நிந்திப்பவனாக மாறலாம். நிந்திக்கும் மகன் நன்கு கவனிக்கக் கூடியவனாக ஆகலாம். ஏனெனில் மனிதர்களின் இதயங்கள் அல்லாஹ்வின் கைப்பிடியில் உள்ளன. அவன் விரும்புவது போல் அவற்றை அவன் மாற்றிக்கொண்டிருக்கிறான்.

புகாரி, முஸ்லிம் இரண்டிலும் பதிவாகியுள்ளது: நுஃமான் பின் பஷீர் அறிவிக்கிறார்கள்: அவருக்கு, அவருடைய தந்தை பஷீர் பின் ஸஅத், ஒரு அடிமையை அன்பளிப்புச் செய்தார். அது பற்றி நபி(ஸல்)அவர்களிடம் அறிவித்தார். நபியவர்கள் கேட்டார்கள்: ‘உமது பிள்ளைகள் அத்தனை பேருக்கும் இதுபோல் அன்பளிப்புச் செய்தீரா?’ அதற்கு அவர் ‘இல்லை’ என்றார். நபியவர்கள் கூறினார்கள்: ‘அப்ப டியானால் அதை (உமது அன்பளிப்பை) திரும்பப் பெற்றுக் கொள்ளும்” [6]

மற்றோர் அறிவிப்பில் உள்ளது: அல்லாஹ்வைப் பயந்து கொள்ளுங்கள். உங்களுடைய பிள்ளைகளுக்கு மத்தியில் நீதமாக நடந்து கொள்ளுங்கள்” [7]

வேறொரு வார்த்தையில் பதிவாகியுள்ளது: இதற்கு என்னை விடுத்து வேறொருவரை சாட்சியாக்குங்கள். நிச்சயமாக நான் அநீதிக்கு சாட்சியம் அளிக்கமாட்டேன்” [8]

பிள்ளைகளில் ஒருவரை விட மற்றொருவருக்குச் சிறப்பு அந்தஸ்து அளிப்பதை நபியவர்கள் அநீதி என்று குறிப் பிட்டுள்ளார்கள். அநீதி செய்வது ஹராம்- தடுக்கப்பட்டதாகும்.

ஆனால் ஒரு மகனுக்குத் தேவையான பொருளை வழங்கினால் - அது மற்றொரு மகனுக்குத் தேவை இல்லை என்றால் அதில் குற்றமில்லை. எடுத்துக்காட்டாக பள்ளிக்கூடத்துப் பொருள்கள் வாங்கிக்கொடுப் பது, சிகிச்சை அளிப்பது, திருமணம் செய்து வைப்பது ஆகியவை ஒரு மகனுக்கு தேவை எனும் நிலையில் அந்த மகனுக்கு மட்டும் அவற்றைச் செய்து கொடுப்பதில் குற்றமில்லை. ஏனெனில் தேவையை முன்னிட்டு வழங்குவதாகும் இது. கட்டாயமாக வழங்கும் செலவுகளின் சட்டம்தான் இதற் கும்.

## 5 - உறவினருக்குச் செய்ய வேண்டிய கடமைகள்

சகோதரர்கள், சிறிய தந்தையர், மாமாமார்கள் மற் றும் அவர்களின் பிள்ளைகள் ஆகியோரைப் போன்று உறவு முறையில் உங்களுடன் நெருங்கி வரக்கூடிய உறவினரின் உரிமையாகும் இது. ஏதேனும் ஒரு பந்தத் தின் அடிப்படையில் உங்களோடு உறவு கொண்டாடும் ஒவ்வொருவருக்கும் இந்த உரிமை உண்டு. உறவின் நெருக்கத்திற்கு ஏற்ப இது அமையும். அல்லாஹ் கூறுகிறான்:

قَالَ اللهُ تعالى: وَآتِ ذَا الْقُرْبَى حَقَّهُ (الاسراء ٢٦)

உறவினர்களுக்கு -அவர்களுக்கு உரிய உரிமையை வழங்கிவிடும்” (17 : 26)

قَالَ اللهُ تعالى: وَاعْبُدُوْا اللهَ وَلاَ تُشْرِكُوْا بِهِ شَيْئًا وَبِالْوَالِدَيْنِ اِحْسَانًا وَبِذِى الْقُرْبَى (سورة النساء ٣٦)

அல்லாஹ் கூறுகிறான்: மேலும் நீங்கள் அல்லாஹ்வை வணங்கி வழிபடுங்கள். அவனோடு எதனையும் இணையாக்காதீர்கள். தாய் தந்தையிடம் நல்லவிதமாக நடந்து கொள்ளுங்கள். உறவினருடனும் நயமாக நடந்து கொள்ளுங்கள்” (4 : 36)

[6] புகாரி, பாகம்: அன்பளிப்பு. பாடம்: பிள்ளைகளுக்கு அன்பளிப்புச் செய்தல் (எண் 2586) - முஸ்லிம், பாகம்: அன்பளிப்புகள். பாடம்: அன்பளிப்புச் செய்வதில் பிள்ளைகளில் ஒருவருக்கு சிறப்பு அந்தஸ்து அளிப்பது வெறுக்கத்தக்கதாகும் (எண் 1623 - 13)

[7] புகாரி, பாகம்: அன்பளிப்பு. பாடம்: அன்பளிப்புக்கு சாட்சி நியமித்தல் (எண் 2587) முஸ்லிம். முன் சென்ற பாடத்தில்.

[8] புகாரி. பகுதி: சாட்சியங்கள். பாடம்: அநீதிக்குச் சாட்சியம் அளிக்கக் கூடாது. (எண் 2650) முஸ்லிம். முன் சென்ற பாடத்தில்.

உறவினருடன் நல்ல முறையில் உறவைப் பேணி வாழ்வது ஒவ்வொருவரின் மீதும் கடமையாகும். உறவின் வலிமை மற்றும் தேவையின் தேட்டத்திற்கு ஏற்ப அந்தஸ்து அளித்திட வேண்டும். சொல், செயல் ரீதியான உதவிகளையும் பொருள் ரீதியான பயன்களை வழங்கிட வேண்டும்., உறவைப் பேணிடவேண்டும். இது ஷரீஅத்தும் பகுத்தறிவும் மனித இயல்பும் விழையும் தேட்டமே யாகும்.

உறவினர்களுடன் இணைந்து வாழும்படி தூண்டக்கூடிய, நல்லார்வம் ஊட்டக்கூடிய நபிமொழிகள் அதிகம் உள்ளன.

عَنْ اَبِى هُرَيْرَةَ اَنَّ النَّبِي ﷺ قَالَ :اِنَّ اللهَ خَلَقَ الْخَلْقَ حَتَّى اِذَا فَرَغَ مِنْهُمْ قَامَتِ الرَّحْمُ فَقَالَتْ: هَذَا مَقَامُ الْعَائِذِ بِكَ مِنَ الْقَطِيْعَةِ فَقَالَ اللهُ نَعَمْ أَمَا تَرْضَيْنَ أَنْ اَصِلَ مَنْ وَصَلَكِ وَ أَقْطَعَ مَنْ قَطَعَكِ قَالَتْ بَلَى قَالَ: فَذِلِكِ لَكِ ثُمَّ قَالَ رَسُوْلُ اللهِ ﷺ : اِقْرَؤُوْا اِنْ شِئْتُمْ (فَهَلْ عَسَيْتُمْ اِنْ تَوَلَّيْتُمْ أَنْ تُفْسِدُوْا فِى الأَرْضِ وَ تُقَطِّعُوْا أَرْحَامَكُمْ، أُولَئِكَ الَّذِيْنَ لَعَنَهُمُ اللهُ فَاَصَمَّهُمْ وَ أَعْمَى أَبْصَـــارَهُمْ

(سورة محمد الآية: ٢ : ٢٣)

நபி(ஸல்)அவர்கள் நவின்றார்கள்: அல்லாஹ் படைப் பினங்களைப் படைத்தான். அவர்களைப் படைத்து முடித்த போது 'இரத்த பந்தம்' எழுந்து அல்லாஹ்வை நோக்கிக் கூறியது: 'யா அல்லாஹ்! உறவை முறிப்பதை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுபவனின் இடமாகும் இது. அதற்கு அல்லாஹ் சொன்னான்: 'ஆம், எவன் உன்னை இணைத்து வாழ்கிறானோ அவனோடு நான் இணக்கமாகிறேன். எவன் உன்னைத் துண்டித்து வாழ்கிறானோ அவனை நானும் துண்டித்து விடுகிறேன். இது உனக்குத் திருப்திதானே! 'அதற்கு இரத்த பந்தம், 'ஆம், நான் திருப்தி கொண்டேன்' என்று கூறியது. அதற்கு இறைவன் இதுதான் உனக்கு உரியது என்றான்' பிறகு நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நீங்கள் விரும்பினால் திருக்குர்ஆனின் இந்த வசனத்தை ஓதிக் கொள்ளுங்கள்: (அல்லாஹ்வின் கட்டளைகளை ஏற்று யுத்தம் செய்வதிலிருந்து) நீங்கள் பின்வாங்கிச் சென்றால் பூமியில் மீண்டும் அராஜகம் செய்வீர்கள் என்பதையும் உங்கள் உறவுகளைப் பரஸ்பரம் துண்டித்துக் கொள்வீர்கள் என்பதையும் தவிர வேறெதையும் உங்களிடம் எதிர்பார்க்க முடியுமா, என்ன? இப்படிச் செய்பவர்களை அல்லாஹ் சபித்து விட் டான். அவர்களைச் செவி டர்களாக்கினான். அவர்களின் பார்வைகளையும் குருடாக்கினான்"(47 : 22 - 23) [9]

மேலும் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: எவர் அல்லாஹ்வின் மீதும் மறுமை நாள் மீதும் நம்பிக்கை கொண்டாரோ அவர் தனது இரத்த பந்தத்துடன் இணைந்து வாழட்டும்" [10]

மக்களில் பெரும்பாலோர் இந்த உரிமையை நிறை வேற்றாமல் வீணாக்கிக் கொண்டிருக்கிறார்கள். அதில் வரம்பு மீறி நடக்கிறார்கள். சிலர் தன் உறவினரோடு இணைந்து வாழ்வதையே அறியாதிருப்பதை நீங்கள் காணலாம். பணத்தாலோ குணத்தாலோ அந்தஸ்தாலோ எந்தத் தொடர்பும் இன்றி அவர் வாழ்ந்து கொண்டி ருக்கிறார். நாட்கள் - மாதங்கள் என காலங்கள் பல கடக்கின்றன. அவர் உறவினர்களைப் பார்ப்பதே இல்லை., சந்திப்பதே இல்லை. ஏதேனும் அன்பளிப்பு செய்து நேச பாசம் வைத்துக்கொள்வதில்லை. இன்ப துன்பங்களில் கலந்து கொள்வதில்லை. ஏதேனும் தேவையை முன்னிட்டும் அவர்களிடம் செல்வதில்லை!

இன்னும் சொல்வதாயின், சிலபேர் சொல் அல்லது செயலால் அல்லது சொல் செயல் இரண்டின் மூலமாக வும் உறவினருக்குத் தீங்கு அளிக்கிறாகள். தூரமானவருடன் குலாவுகிறார்கள். உறவினருடன் பிணங்கு கிறார்கள்!

மக்களில் சிலர் உள்ளனர். உறவினர்கள் இணைந்து வாழும்பொழுது இவர்களும் இணைந்து வாழ்வார் கள். அவர்கள் உறவைத் துண்டித்தால் இவர்களும் துண்டித்து விடுவார்கள். இப்படிச் செய்பவன் உண்மை யில் உறவை இணைத்து வாழ்பவன் அல்லன். ஓர் உபகாரத்தைப் பெற்றமைக்காக பதிலுபகாரம் செய்கி றான், அவ்வளவுதான்! அது, உறவினர் - உறவில்லாதவர் எல்லோருக்கும் கிடைப்பதுதானே! உபகாரத்திற் குப் பதிலுபகாரம் செய்வதென்பது உறவினருக்கு மட்டும் அல்லவே!

---

[9] புகாரி பாகம்: நல்லொழுக்கம். பாடம்: பந்துக்களுடன் இணைந்து வாழ்கிறாரோ அவருடன் அல்லாஹ் இணக்கமாகிறான். (எண் 5987) முஸ்லிம், பாகம்: நன்மை செய்தல், இணைந்து வாழ்தல், நல்லொழுக்கங்கள். பாடம்: இரத்த பந்தம், அதன் உறவைத் துண்டிப்பது விலக்கப் படல். (எண்2554)

[10] புகாரி. பாகம்: நல்லொழுக்கம். பாடம்: விருந்தினரை கௌரவித்தல், தாமே முன்வந்து அவருக்குப் பணிவிடை செய்தல். (எண் 6138)

எனவே எவன்,அல்லாஹ்வுக்காக என்று தூய எண்ணத்துடன் உறவை இணைத்து வாழ்கிறானோ அவன் தான் உண்மையில் உறவைப் பேணிவாழ்பவன். அவர்கள் இணைந்து வருவதையோ விலகிச் செல்வதையோ எதை யும் அவன் பொருட்படுத்தமாட்டான்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உறவைப் பேணி நடந்தால் பதிலுக்கு உறவைப் பேணுகிறானே அவன் இரத்த பந்தத்தைப் பேணிநடப்பவன் அல்லன். உண்மை யில் சொந்த பந்தத்தைப் பேணுபவன் யார் எனில் உறவு முறிந்து போனாலும் உறவைப்பேணிக்காக்கிறானே அவன்தான்" (அறிவிப்பு: அப்துல்லாஹ் பின் அம்ர் பின் ஆஸ் (ரலி) [11]

ஒருமுறை நபி (ஸல்) அவர்களிடம் ஒருமனிதர் கேட்டார்: அல்லாஹ்வின் தூதரே! எனக்குச் சில உறவி னர் உள்ளனர். நான் அவர்களுடன் இணைந்து வாழத்தான் விரும்புகிறேன்., ஆனால் அவர்கள்தான் எனது உறவைத் துண்டிக்கிறார்கள். நான் அவர்களுக்கு உபகாரம் செய்கிறேன். அவர்களோ எனக்குத் தீங்கிழைக்கி றார்கள். நான் அவர்கள் விஷயத்தில் பொறுமையை மேற்கொள்கிறேன். அவர்களோ என்னுடன் அபத்தமாக நடக்கின்றனர்"

இதனைக் கேட்டதும் நபியவர்கள் சொன்னார்கள்: நீர் சொல்வது உண்மையெனில் அவர்களின் முகத்தில் கரி பூசியவர் ஆவீர். இந்த நடத்தையை நீர் மேற்கொள்ளும் வரை அவர்களுக்கு எதிராக உமக்கு உதவி செய்யும் ஓர் உதவியாளர் அல்லாஹ்வின் சார்பில் உம்மோடு இருப்பார்" (முஸ்லிம்) [12]

உறவினருடன் இணைந்து வாழும்போது, அப்படிப்பட்டவருடன் நிச்சயமாக அல்லாஹ் இவ்வுலகிலும் மறு உலகிலும் இணக்கமாகிறான்., அவருக்குக் கிருபை புரிகிறான்., காரியங்களை அவருக்கு எளிதாக்குகிறான்., துன் பங்களை அகற்றி இன்பம் அளிக்கிறான்! அது மட்டுமல்ல! பந்துக்களுடன் இணைந்து வாழ்வதன் மூலம் குடும்பங்களுக்கு மத்தியில் நெருக்கமும், பரஸ்பர அன்பும் ஒருவர் மற்றவர் மீது இரக்கம் கொள்வதும் இன்ப துன்பங்களில் ஒருவருக்கு ஒருவர் உதவியாக இருப்பதும், அதனால் எற்படும் அக மகிழ்ச்சி போன்ற எல்லா நன்மைகளும் உள்ளன. இவையாவும் அனுபவப்பூர்வமாக அறியப்பட்டவையாகும். ஆனால் பந்த முறிவு ஏற்பட் டால், ஒருவரை விட்டும் ஒருவர் விலகிப் போனால் எல்லாவும் தலைகீழாகி தீமைகளாகவே முடியும்!

## 6 கணவன் - மனைவியின்
## உரிமைகள், கடமைகள்

திருமணத்தில் முக்கியமான பல விளைவுகளும் மிகப் பெரிய தேட்டங்களும் உள்ளன. திருமணம் என்பது ஆணையும் பெண்ணையும் பிணைக்கும் ஓர் ஒப்பந்தமாகும். அவர்கள் ஒவ்வொருவரும் பரஸ்பரம் நிறைவேற்ற வேண்டிய அவசியமான உரிமைகளையும் கடமைகளை யும் திருமணம் சுமத்துகிறது. அவை முறையே உடல் ரீதியான கடமைகள். கூட்டு வாழ்வு ரீதியான கடமைகள். பொருள் ரீதியான கடமைகள் என உள்ளன.

ஒருவர் மற்றவருடன் நல்ல முறையில் இணைந்து வாழ்வது கணவன் மனைவி இருவர் மீதும் கடமையா கும். தன் மீது கடமையாக உள்ள உரிமையை எவ்வித வெறுப்பும் தட்டிக்கழிப்பும் இன்றி தாராள மனத்து டன் - இலகுவாக அளித்திட வேண்டும்.

قَالَ اللهُ تعالى: وَعَاشِرُوْهُنَّ بِالْمَعْرُوْفِ (سورة النساء الآية: ١٩)

அல்லாஹ் கூறுகிறான்: அவர்களுடன் நல்ல முறையில் வாழ்க்கை நடத்துங்கள்"(4 : 19) மற்றோரிடத்தில்,

قال الله تعالى: وَلَهُنَّ مِثْلُ الَّذِى عَلَيْهِنَّ بِالْمَعْرُوْفِ وَلِلرِّجَالِ عَلَيْهِنَّ دَرَجَةٌ (البقرة ٢٢٨)

பெண்களுக்குச் சில கடமைகள் உள்ளது போன்று முறைப்படி அவர்களுக்குச் சில உரிமைகளும் உள் ளன. ஆயினும் ஆண்களுக்குப் பெண்களைவிட ஒருபடி உயர்வு உண்டு (2 : 228)

கணவனும் மனைவியும் - ஒருவர் மற்றவருக்குச் செலுத்தக் கடமைப்பட்டுள்ள உரிமைகளை முறையாகச் செலுத்தினால் அவ்விருவரின் வாழ்க்கை பாக்கியம் மிக்கதாகத் திகழும். இன்பமும் மகிழ்வும் நீடித்திருக்கும். இல்லையெனில் பிணக்கும் பிரிவும்தான் ஏற்படும். அவர்கள் ஒவ்வொருவரின் வாழ்விலும் துன்பங்கள்தாம் சூழும்.

---

[11] புகாரி. பாகம்: நல்லொழுக்கம். பாடம்: பதிலுக்கு உறவைப் பேணுபவன் பந்தத்ததைப் பேணுபவன் அல்லன். (எண் 5991)

[12] முஸ்லிம். பாகம்: நன்மை செய்தல், இணைந்து வாழ்தல், நல்லொழுக்கங்கள். பாடம்: இரத்த பந்தமும் அதன் உறவைத் துண்டிப்பதும் விலக்கப் படல். (எண் 2558)

பெண்ணிடம் நல்லவிதமாக நடந்துகொள்வது, அவளது நிலையை அனுசரித்துப்போவது பற்றியும் பூரணமான நிலை (அவளிடம்) சாத்தியமற்றது என்பது பற்றியும் நிறைய நபிமொழிகள் வந்துள்ளன. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்:

اِسْتَوْصُوْا بِالنِّسَاءِ خَيْرًا ، فَإِنَّ الْمَرْأَةَ خُلِقَتْ مِنْ ضِلْعٍ ،وَإِنَّ أَعْوَجَ مَا فِى الضِّلْعِ أَعْلاَهُ ، فَإِنْ ذَهَبْتَ تُقِيْمُهُ كَسَرْتَهُ وَ اِنْ تَرَكْتَهُ لَمْ يَزَلْ أَعْوَجَ ، فَاسْتَوْصُوْا بِالنِّسَاءِ (اخرجه البخارى)

பெண்கள் விஷயத்தில் நல்லவிதமாக நடந்து (கொள்ளும்படி கூறும்) என் அறிவுரையை ஏற்றுக்) கொள் ளுங்கள். ஏனெனில் பெண், விலா எலும்பிலிருந்து படைக்கப்பட்டிருக்கிறாள். விலா எலும்பிலேயே அதன் மேல் பகுதி மிகக் கோணலானது. நீ அதை (பலவந்தமாக நேராக்க முயன்றால் அதை உடைத்து விடுவாய். அதை அப்படியே விட்டுவிட்டால் அது கோணலாகவே இருக்கும். ஆகவே பெண்கள் விஷயத்தில் நல்லவிதமான நடக்க வேண்டும் எனும் என் அறிவுரையை ஏற்றுக்கொள்ளுங்கள்" [13]

மற்றோர் அறிவிப்பில் வந்துள்ளது: நிச்சயமாக பெண் விலா எலும்பிலிருந்து படைக்கப்பட்டிருக்கிறாள். உனக்கு எந்த வகையிலும் நேர்வழிக்கு வரமாட்டாள். நீ அவள் மூலம் சுகம் அனுபவிக்க வேண்டுமானால் அவளில் கோணல் இருக்கவேதான் அவளைக்கொண்டு நீ சுகம் அனுபவிக்க வேண்டும். அவளை நேராக்கியே தீருவேன் என்று நீ புறப்பட்டால் அவளை முறித்துவிடுவாய். அவளை முறிப்பதுதான் அவளை மணவிலக்கு செய்வது என்பது" [14]

மேலும் நபிகளார் (ஸல்) அவர்கள் அருளினார்கள்: ஓர் இறைநம்பிக்கையாளன் இறைநம்பிக்கை கொண்ட பெண்ணை (மனைவியை) கோபிக்க வேண்டாம். அவளிடம் ஒரு குணத்தை அவன் வெறுத்தான் எனில் இன் னொரு குணத்தை பொருந்திக்கொள்ளலாம்" [15]

இந்த ஹதீஸ்களின் மூலம் தம் சமுதாயத்தினருக்கு நபி (ஸல்) அவர்கள் தரும் வழிகாட்டல் இதுதான்: ஒரு கணவன் தன் மனைவியிடம் எப்படி நடந்துகொள்ள வேண்டும். அவளிடம் இலகுவாக உள்ள குணம் எதுவோ அதனையே அவன் பொருந்திக் கொள்வது அவசியம். ஏனெனில் அவள் படைக்கப்பட்டிருக்கும் இயல்பு நிலை என்னவெனில், அவள் பரிபூரணமான நிலையில் இருக்க மாட்டாள் என்பதுதான். மாறாக அவளிடம் அவசியம் கோணல் இருக்கத்தான் செய்யும். அவள் படைக்கப்பட்டுள்ள இயல்பான போக்கின்படியே அவளிடம் நடந்து கொண்டாலே தவிர ஓர் ஆண், அவளோடு இன்பமான வாழ்க்கையை மேற்கொள்வது சாத்தியமாகாது.

மேலும் இந்த நபிமொழிகள் மூலம் தெரியவருகிறது: ஒரு பெண்ணிடம் உள்ள நல்ல அம்சங்களையும் கெட்ட அம்சங்களையும் ஒப்பிட்டுப் பார்க்கவேண்டும். அவளது ஒருகுணம் வெறுப்புக்குரியது எனில் அவளிடம் பொருந்திக் கொள்கிற மற்றொரு குணத்துடன் அதனை ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். வெறுப்பு, கோபம் எனும் கண்ணாடி மூலம் மட்டுமே அவளைப் பார்க்கக்கூடாது.

பெரும்பாலான ஆண்கள் தம் மனைவியிடம் இருந்து முழுமையான - பரிபூரணமான நிலையை எதிர் பார்க்கிறார்கள். ஆனால் இது சாத்தியமில்லாததாகும். இதனால்தான் கஷ்டத்திற்கும் சிரமத்திற்கும் அவர்கள் ஆளாகிறார்கள். மேலும் அவர்களுடைய மனைவியர் மூலம் சுகம் அனுபவிப்பதும் இன்பமாக வாழ்வதும் அவர் களுக்கு சாத்திய மாகாமல் போய்விடுகிறது. சிலபோது மணமுறிகூட ஏற்பட்டு விடுகிறது.

நபி(ஸல்)அவர்கள் சுட்டிக்காட்டியது போன்று: (கோணலாக உள்ள) அவளை நிமிர்த்தியே தீருவேன் என்று நீ பிடிவாதமாக இருந்தால் அவளை முறித்து விடுவாய். அவளை முறித்தல் என்பதுதான் மணமுறிவு"

எனவே கணவன் சற்று பாராமுகமாக நடந்து கொள்ள வேண்டும். மனைவியின் ஒவ்வொரு செயல் களையும் துருவி ஆராய்ந்து கொண்டிருக்கக்கூடாது. கண்டும் காணாததுபோல் இருந்திட வேண்டும். ஆனால் ஒன்று: தீன் -இறைமார்க்கத்திற்கோ கௌரவத்திற்கோ அது பங்கம் விளைவிக்காதிருக்க வேண்டும்.

---

[13] புகாரி. பகுதி: நபிமார்களின் செய்திகள். பாடம்:ஆதத்தையும் அவருடைய சந்ததிகளையும் படைத்தது. (3331) முஸ்லிம். பகுதி: பாலூட்டுதல். பாடம்: பெண்கள் விஷயத்தில் அறிவுரை கூறுதல் (1468 - 60)

[14] ஸஹீஹ் முஸ்லிம். முன் சென்ற பகுதிலேயே வந்துள்ளது. (1468 - 60)

[15] ஸஹீஹ் முஸ்லிம் பகுதி: பாலூட்டுதல் பாடம்: பெண்கள் விஷயத்தில் அறிவுரை கூறுதல் (1469)

## கணவனின் கடமைகள்

உணவு, உடை, இருப்பிடம் போன்ற அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றிக் கொடுப்பதும் அதற்கான செலவுகளுக்குப் பணம்கொடுப்பதும் கணவன் மீதுள்ள கடமைகளாகும். ஏனெனில் அல்லாஹ் கூறியுள்ளான்:

قال الله تعالى : وَعَلَى الْمَوْلُوْدِ لَهُ رِزْقُهُنَّ وَ كِسْوَتُهُنَّ بِالْمَعْرُوْفِ (سورة البقرة الآية : ٢٣٣)

(குழந்தையின் தாயாகிய) அவர்களுக்கு நல்ல முறையில் உணவளிப்பதும் உடைகள் கொடுப்பதும் குழந்தையின் தந்தை மீதுள்ள கடமையாகும்" (2 : 233)

قَالَ النَّبِيُّ ﷺ: وَلَهُنَّ عَلَيْكُمْ رِزْقُهُنَّ وَكِسْوَتُهُنَّ بِالْمَعْرُوْفِ

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: முறைப்படி அவர்களுக்கு (மனைவியருக்கு) உணவு, உடை அளிப்பதும் அவர்களுக்கு நீங்கள் செய்ய வேண்டிய கடமைகளாகும்"

நபி (ஸல்)அவர்களிடம் கேட்கப்பட்டது: எங்களில் ஒருவர் தன் மனைவிக்குச் செலுத்த வேண்டிய கடமை என்ன? என்று! அதற்கு நபியவர்கள் சொன்னார்கள்: நீ உணவு உட்கொண்டால் அவளுக்கு உண்ணக் கொடுக்க வேண்டும். நீ (புதிய) ஆடைஅணியும்போது அவளுக்கும் அவ்வாறு அணியக் கொடுக்க வேண்டும். அவளை நீ முகத்தில் அடிக்கக் கூடாது. கடின வார்த்தை கூறிக் கண்டிக்க வேண்டுமென்றாலோ பேசாமல் கொள்ளாமல் இருக்க வேண்டுமென்றாலோ உங்கள் வீட்டினுள்தான் வைத்துக்கொள்ள வேண்டும்" [16]

மனைவிக்குக் கணவன் செலுத்தவேண்டிய மற்றொரு கடமை என்னவெனில், அவளுக்கும் அவளது சக்களத்திக்கும் மத்தியில் அவன் நீதி செலுத்த வேண்டும்., அவனுக்கு இரண்டு மனைவியர் இருக்கும் பட்சத்தில்! -அவ்விருவரின் செலவீனங்களில், தங்கும் வசதிகளில், இரவைப் பகிர்வதில் - வேறு என்னென்ன விஷயங்களில் நீதி செலுத்துவது சாத்தியமோ அவை அனைத்திலும் அவன் நீதியுடன் நடந்து கொள்ள வேண்டும். ஒரு மனைவியின் பக்கமே முற்றிலும் சாய்வது பெரும் பாவமாகும்.

நபி(ஸல்) அவர்கள் அருளினார்கள்: ஒரு மனிதனுக்கு இரண்டு மனைவியர் இருந்து ஒருத்தியைப் புறக் கணித்து விட்டு மற்றொருத்தியின் பக்கம் அவன் சாய்ந்து விட்டால் மறுமை நாளில் ஒரு புஜம் சாய்ந்தவனா கவே அவன் வருவான்" [17]

ஆனால் நீதி செலுத்துவது சாத்தியம் இல்லாத காரியங்களில் - அன்பு, மன நிறைவு போன்ற விஷயங் களில் அவன் மீது குற்றமில்லை. ஏனெனில் இது அவனது சக்திக்கு அப்பாற்பட்டவையாகும். அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى : وَلَنْ تَسْتَطِيْعُوْا أَنْ تَعْدِلُوْا بَيْنَ النِّسَاءِ وَلَوْ حَرَصْتُمْ (النساء ١٢٩)

மனைவியரிடையே முழுக்க முழுக்க நீதமாக நடந்திட நீங்கள் விரும்பினாலும் அது உங்களால் முடி யாது" (4 : 129)

நபி (ஸல்) அவர்கள் எல்லா விஷயங்களிலும் தங்கள் மனைவியரிடையே பங்கிட்டு நீதமாக நடந்து கொள்பவர்களாய் இருந்தார்கள்.

மேலும் இவ்வாறு பிரார்த்தனை செய்பவர்களாகவும் இருந்தார்கள்: யா அல்லாஹ்! இதுதான் என்னால் முடிந்த அளவிலான நான் செய்யும் பங்கீடு. எவற்றின் மீது உனக்கு மட்டுமே அதிகாரம் உள்ளதோ எனக்கு எந்த அதிகாரமும் இல்லையோ அப்படிப்பட்ட விஷயங்களில் என்னை நீ பழிப்புக்கு உள்ளாக்காதே" [18]

ஆயினும் அவன், ஒரு மனைவிக்கு மற்றவளை விடவும் -அவளது அனுமதியுடன் முன்னுரிமை கொடுத்தால் அதில் குற்றமில்லை. சௌதா (ரலி) அவர்கள் தமது பங்கிலுள்ள நாளை ஆயிஷா (ரலி) அவர்களுக்கு விட்டுக் கொடுத்தபோது நபி (ஸல்) அவர்கள் ஆயிஷாவுக்கு - அவர்களது பங்கிலுள்ள நாளையும் சௌதா

---

[16] அபூ தாவூத். பாகம்: திருமணம். பாடம்: மனைவிக்குக் கணவன் செய்ய வேண்டிய கடமைகள். (எண் 2142) இப்னு மாஜா. பாகம்: திருமணம். பாடம்: மனைவிக்குக் கணவன் செய்ய வேண்டிய கடமைகள். எண் 1950) அல்பானிஅவர்கள் மிஷ்காத் நூலுக்கு எழுதிய மேலாய்வில்இதனைக் கூறியுள்ளார். (எண் 2- 972) இதன் அறிவிப்புத் தொடர் ஹஸன் தரத்திலானது.

[17] ஆபூ தாவூத். பாகம்: திருமணம். பாடம்: மனைவியர் மத்தியில் இரவு தங்குவதைப் பங்கீடு செய்வது. (எண் 2133) திர்மிதி. பாகம்: திருமணம். பாடம்: சக்களத்திகள் மத்தியில் சரிசமமாக நடந்து கொள்வது பற்றி வந்துள்ள விஷயங்கள். (எண் 1141) இப்னு மாஜா. பாகம்: திருமணம். பாடம்: மனைவியர் மத்தியில் இரவு தங்குவதைப் பங்கீடு செய்வது. (எண் 1969) ஸஹீஹு ல் ஜாமிஉ வில் அல்பானி அவர்கள் இந்த நபிமொழியை ஆதாரப்பூர்வமானது என்று கூறியுள்ளார்கள்.

[18] ஆபூ தாவூத். பாகம்: திருமணம். பாடம்: மனைவியர் மத்தியில் இரவு தங்குவதைப் பங்கீடு செய்வது. (எண் 2134) திர்மிதி. பாகம்: திருமணம். பாடம்: சக்களத்திகள் மத்தியில் சரிசமமாக நடந்து கொள்வது பற்றி வந்துள்ள விஷயங்கள். (எண் 1140) இப்னு மாஜா. பாகம்: திருமணம். பாடம்: மனைவியர் மத்தியில் இரவு தங்குவதைப் பங்கீடு செய்வது. (எண் 1971)

விட்டுக் கொடுத்த நாளையும் சேர்த்து அளித்து போன்று! மேலும் நபி (ஸல்)அவர்கள் நோய்வாய்ப்பட்டு மரணம் அடைந்த நாளில் 'நாளை நான் எங்கே தங்குவேன்? நாளை நான் எங்கே தங்க வேண்டும்?' என்று கேட்டுக் கொண்டிருந்தார்கள். நபியவர்கள் தமது விருப்பப்படி தங்குவதற்கு அவர்களின் மனைவியர் அனுமதி அளித்தனர். அவ்வாறே ஆயிஷா (ரலி) அவர்களின் வீட்டிலேயே நபியவர்கள் தங்கியிருந்தார்கள், மரணம் அடையும் வரையில்! [19]

## மனைவியின் கடமைகள்

மனைவி செலுத்த வேண்டிய கடமைகள்தான் கணவன் செலுத்த வேண்டிய கடமைகளை விட அதி முக்கியமானவை ஆகும். ஏனெனில் அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى : وَلَهُنَّ مِثْلُ الَّذِى عَلَيْهِنَّ بِالْمَعْرُوْفِ وَلِلرِّجَالِ عَلَيْهِنَّ دَرَجَةٌ (البقرة ٢٢٨)

பெண்களுக்குச் சில கடமைகள் உள்ளதுபோல் பொதுவான நியதிப்படி அவர்களுக்குச் சில உரிமை களும் உள்ளன., ஆயினும் பெண்களை விட ஆண்களுக்கு ஒருபடி உயர்வு உண்டு (2 : 228)

ஆண்தான் பெண்ணை நிர்வகிப்பவன். அவளது நலன்களை அவன் பேணிடவேண்டும். அவளுக்குக் கல்வியும் நல்லொழுக்கமும் அளித்து நல்வழி காட்டிட வேண்டும்.

قال الله تعالى: الِّرجَالُ قَوَّامُوْنَ عَلَىالنِّسَاءِ لِمَا فَضَّلَ اللهُ بَعْضَهُمْ عَلَى بَعْض وبِمَا أَنْفَقُوْا مِنْ أَمْوَالِهِمْ (سورة النساء ٣٤)

அல்லாஹ் கூறுகிறான்: ஆண்கள்தாம் பெண்களை நிர்வகிப்பவர்கள். அதற்குக் காரணம் அல்லாஹ் அவர் களில் சிலரை விடச் சிலருக்கு உயர்வை அளித்துள்ளான் என்பதும் மேலும் ஆண்கள் தங்கள் செல்வத்தில் இருந்து செலவு செய்கிறார்கள் என்பதுமாகும்" (4 : 34)

கணவனுக்கு மனைவி செலுத்த வேண்டிய கடமைகள் யாதெனில், அல்லாஹ்வுக்கு பாவமாக இல்லாத காரியங்களில் அவள் அவனுக்குக் கீழ்ப்படிந்திட வேண்டும். அவனது இரகசியங்களையும் சொத்துகளையும் அவள் பாதுகாக்க வேண்டும்.

நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: ஒரு மனிதன் இன்னொரு மனிதனுக்கு ஸஜ்தா செய்ய வேண்டும் என நான் கட்டளையிடுவதாக இருந்தால் கணவனுக்கு ஸஜ்தா செய்யும்படி மனைவிக்கு கட்டளையிட்டிருப் பேன்" [20]

மேலும் சொன்னார்கள்: ஒருவன் தன் மனைவியைப் படுக்கைக்கு அழைக்கும்போது அவள் அதனை மறுத்தால் அவன், அவள் மீது கோபமுற்ற நிலையில் இரவைக் கழித்தால் விடியும் வரையில் மலக்குகள் அவளை சபிக்கிறார்கள்" [21]

மனைவியின் மற்றொரு கடமை என்னவெனில், முழுமையாக இன்பம் அனுபவித்தல் அவனுக்குக் கிடைக் காமல் அதனைப் பாழாக்கக்கூடிய எந்த அமலையும் அவள் மேற்கொள்ளக்கூடாது. எந்த அளவுக்கெனில், அவள் மேற் கொள்வது நஃபில் - அதிகப்படியான வழிபாடாக இருந்தாலும் சரியே! (அதனை மேற்கொள்ளக் கூடாது) ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் அருளியுள்ளார்கள்:

கணவன் ஊரில் இருக்கும் நிலையில் -அவனது அனுமதியின்றி நோன்பு நோற்பது எந்தப் பெண்ணுக்கும் ஹலால் - ஆகுமானது அல்ல. அவனது வீட்டில் அவனது அனுமதியின்றி யாரையும் நடையேற்றுவதும் அவ ளுக்கு ஆகுமானது அல்ல" [22]

---

[19] **புகாரி. பாகம்: திருமணம். பாடம்: ஒரு மனிதன் தன் மனைவியரிடம் அனுமதி கேட்டால். (எண் 5217) முஸ்லிம். பாகம்: நபித்தோழர்களின் சிறப்புகள். பாடம்: ஆயிஷா (ரலி) அவர்களின் சிறப்பு. (எண் 2443)**

[20] **அபூ தாவூத். பாகம்: திருமணம். பாடம்: மனைவி, கணவனுக்குச் செய்ய வேண்டிய கடமைகள். (எண் 2140) திர்மிதி. பாகம்: பாலூட்டுதல். பாடம்: மனைவி, கணவனுக்குச் செய்ய வேண்டிய கடமைகள். (எண் 1159) திர்மிதி அவர்கள் கூறுகிறார்கள்: இது ஹஸன் ஃகரீப் தரத்திலான ஹதீஸ். ஸஹீஹு ல் ஜாமிஉ - வில் அல்பானி அவர்கள் இதனை ஸஹீஹான ஹதீஸ் என்று குறிப்பிட்டுள்ளார். (எண் 5294)**

[21] **புகாரி. பாகம்: திருமணம். பாடம்: ஒரு பெண் தன் கணவனுடன் படுப்பதை வெறுத்தவளாக இரவைக் கழித்தால். (எண் 5193) முஸ்லிம். பாகம்: திருமணம். பாடம்: ஒரு பெண் தன் கணவனுடன் படுக்கைக்குச் செல்வதை வெறுப்பது விலக்கப்பட்டதாகும். (எண் 1436 - 122)**

[22] **புகாரி. பாகம்: திருமணம். பாடம்: ஒரு பெண் தன் கணவனது வீட்டில் அவனது அனுமதியின்றி யாரையும் அனுமதிக்கக் கூடாது. (எண் 5195) முஸ்லிம். பாகம்: ஜகாத். பாடம்: ஓர் அடிமை தன் எஜமானனின் செல்வத்திலிருந்து செலவு செய்வது பற்றி. (எண் 1026)**

ஒரு மனிதன் தனது மனைவியை உவந்து கொள்வதை அவள் சுவனம் செல்வதற்கான காரணங்களில் ஒன்றாக ஆக்கினார்கள் நபியவர்கள். திர்மிதியில் உம்மு ஸல்மா (ரலி) அவர்களது ஓர் அறிவிப்பில் வந்துள்ளது. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

எந்த ஒரு பெண் - அவளுடைய கணவன் அவளைத் திருப்திகொள்ளும் நிலையில் மரணம் அடைகிறாளோ அவள் நிச்சயம் சுவனம் செல்வாள்" [23]

## 7 - ஆட்சியாளர்கள் - குடிமக்களின் உரிமைகள், கடமைகள்

ஆட்சியாளர்கள் என்போர் முஸ்லிம்களின் காரியங்களுக் குப் பொறுப்பு ஏற்கும் அதிகாரம் உடையோர் ஆவர். எல்லாவற்றையும் உள்ளடக்கும் பொது அதிகாரமாக அது இருக்கலாம். நாட்டின் உயர்நிலை தலைவர் போன்று! அல்லது சிறிய அளவிலான அதிகாரமாக இருக்கலாம். குறிப்பிட்டதொரு நிர்வாகமோ அல்லது பணியோ ஒப்படைக்கப்பட்ட அதிகாரி போன்று!

இத்தகைய ஆட்சியதிகாரம் வழங்கப்பட்டவர்களுக்கு மக்கள் மீது சில உரிமைகள் உள்ளன. இதேபோல மக்க ளுக்கும் ஆட்சியாளர்கள் மீது சில உரிமைகள் உள்ளன.

ஆட்சியாளர்கள் செய்யவேண்டிய கடமை என்ன வெனில், அவர்கள் மீது அல்லாஹ் சுமத்திய நிர்வாகம் எனும் அமானிதத்தை முறையாக அவர்கள் கவனிக்க வேண்டும். அது தொடர்பான எல்லாப் பொறுப்புகளை யும் அவர்கள் ஏற்றுச் செயல்படுத்த வேண்டும். மக்களின் நலன்நாடுதல் என்பதுதான் அது. இவ்வுலக வாழ்வின் முன்னேற்றத்திற்கும் மறுவுலகின் வெற்றிக்கும் பொறுப்பேற்கக்கூடிய சீரான, செம்மையான பாதையில் மக்களை வழிநடத்திச் செல்லுதல் என்பதும்தான் அது.

'முஃமின்கள்' எனும் இறைநம்பிக்கையாளர்களின் பாதையைப் பின்பற்றுவதில்தான் அது அமைந்துள்ளது. அதுதான் நபி (ஸல்) அவர்கள் சென்றபாதை! ஏனெனில் அதில்தான், ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர் களுக்கும் அவர்களின் ஆட்சியில் வாழும் மக்களுக்கும் அவர்களது அதிகாரத்தின் கீழ் பணியாற்றும் அனை வருக்கும் நற்பாக்கியம் உள்ளது.

மேலும் இந்தப் பாதைதான் ஆட்சியாளர்களைக் குறித்து மக்களை அதிகம் அதிகம் மன நிறைவு கொள் ளச் செய்யக்கூடியது. அவர்களிடையே பிணைப்பை ஏற்படுத்தக்கூடியது. அவர்களின் ஆணைகளுக்குக் கீழ்ப் படியச் செய்யக்கூடியது. மேலும் ஆட்சியாளர்களிடம் அவர்கள் ஒப்படைத்துள்ள பொறுப்புகளில் அமானிதத்தை பாதுகாக்குமாறு செய்யக்கூடிய வழியும் இதுவேயாகும்.

ஏனெனில் எவர் அல்லாஹ்வுக்குப் பயந்து வாழ்கிறாரோ அவரை அல்லாஹ் மக்களை விட்டும் பாதுகாக் கிறான். எவர் அல்லாஹ்வின் விருப்பத்தை நாடி அதற் கேற்ப செயல்படுகிறாரோ அவருக்கு மக்களின் அன்பும் திருப்தியும் உதவியும் கிடைக்கச் செய்வதற்கு அல்லாஹ் பொறுப்பேற்கிறான். ஏனெனில் இதயங்கள் அல்லாஹ் வின் பிடியில் உள்ளன. தன் விருப்பப்படி அவற்றைப் புரட்டுகிறான்.

ஆட்சியாளர்களுக்கு மக்கள் செய்ய வேண்டிய கடமை என்னவெனில், ஆட்சியாளர்கள் பொறுப்பேற்றுச் செய்யும் பணிகளில் அவர்களின் நலனை மக்கள் நாடவேண்டும்., அவர்களிடம் கவனக்குறைவு வந்தால் அவர்களுக்கு நினைவூட்ட வேண்டும். சத்தியத்தை விட்டும் அவர்கள் பிறழ்ந்து செல்லும் பொழுது நன்னெறி யின் பக்கம் அவர் களை அழைத்திட வேண்டும். அவர்கள் பிறப்பிக்கும் ஆணைகள் பாவமான விஷயங்களாக இல்லை எனில் அவற்றிற்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும்.

ஏனெனில் அப்படிச் செய்வதில்தான் ஆட்சியதிகாரமும் சட்டம் - ஒழுங்கும் சீர்பெற முடியும். ஆட்சியாளர் களுக்கு எதிராக நடப்பதால், அவர்களோடு முரண்படுவதால் நாட்டில் தான்தோன்றித்தனமான, தன்னிச்சை யான போக்குதான் வளரும். எல்லாமே சீர்கெட்டுத்தான் போகும்!

ஆதனால்தான் தனக்கும் தன் தூதருக்கும் கீழ்ப்படி யுமாறும் அதிகாரத்தில் உள்ளோருக்குக் கட்டுப்பட்டு நடக்குமாறும் அல்லாஹ் கட்டளையிடுகிறான்.

فَقَالَ تَعَالَى: يَا اَيُّهَا الَّذِيْنَ آمَنُوْا اَطِيْعُوْا اللهَ وَ اَطِيْعُوْا الرَّسُوْلَ وَ اُولِى الاَمْرِ مِنْكُمْ (سورة النساء ٥٩)

இறைநம்பிக்கையாளர்களே! அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படியுங்கள். அவனுடைய தூதருக்கும் கீழ்ப்படியுங்கள். மேலும் உங்களில் அதிகாரம் உடையோருக்கும் (கீழ்ப்படியுங்கள்)" (4: 59)

---

[23] திர்மிதி. பாகம்: பாலூட்டுதல். பாடம்: ஒரு பெண், கணவனுக்குச் செய்யும் கடமைகள். (எண் 1161) இப்னு மாஜா. பாகம்: திருமணம். பாடம்: ஒரு பெண், கணவனுக்குச் செய்யும் கடமைகள். (எண் 1854) திர்மிதி கூறுகிறார்கள்: இது ஹஸன் ஃகரீப் தரத்திலானது.

நபி (ஸல்)அவர்கள் நவின்றார்கள்: செவியேற்பதும் கீழ்ப்படிவதும் முஸ்லிம்கள் மீது கடமையாகும்., அவர்கள் விரும்பக்கூடிய அல்லது வெறுக்கக்கூடிய எதுவானாலும் சரியே! ஆனால் பாவத்தைக் கொண்டு ஏவப்பட்டாலே தவிர! பாவத்தைக்கொண்டு ஏவப்பட்டால் செவியேற்றலும் இல்லை. கீழ்ப்படிதலும் இல்லை" [24]

அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் ஒரு பயணத்தில் இருந்தோம். எல்லோரும் ஓரிடத்தில் தங்கினோம். அப்பொழுது நபியவர்களின் அழைப்பாளர் ஒருவர் **அஸ் ஸலாத்து ஜாமிஆ** (தொழுகை கூடுகிறது) என்று அறிவிப்புச்செய்தார். உடனே நாங்கள் நபியவர்களின் சமூகத்தில் ஒன்றுகூடினோம். நபியவர்கள் கூறினார்கள்:

திண்ணமாக அல்லாஹ் அனுப்பி வைத்த எந்த நபியானாலும் அவர் மீது இது கடமையாக இருந்தது. அதாவது, அல்லாஹ் அவருக்குக் கற்றுக்கொடுத்த நன்மைகள் அனைத்தையும் மக்களுக்கு அவர் அறிவித் துக் கொடுத்திட வேண்டும். அல்லாஹ் அவருக்குக் கற்றுக் கொடுத்த அனைத்து தீமைகள் குறித்தும் மக்களை எச்சரிக்கை செய்திட வேண்டும். மேலும் நிச்சயமாக உங்களது இந்தச் சமுதாயத்தின் நன்னிலை அதன் ஆரம்ப காலகட்டத்தில் அமைக்கப்பட்டுள்ளது. அதன் இறுதி காலத்திலோ பெரும் துன்பங்கள் ஏற்படும். நீங்கள் வெறுக்கும் பல காரியங்களும் நிகழும். மேலும் ஒன்று மற்றொன்றைத் தோற்கடிக்கும் வகையிலான குழப்பங்கள் தோன்றும்.

அந்தக் குழப்பங்கள் வரும்பொழுது நம்பிக்கையா ளன் சொல்வான்: இதோ, எனது அழிவு! என்று! எவர் நரகத்தை விட்டும் தூரமாக்கப்பட்டு சுவனம் செல்ல விரும்புகிறாரோ அவர் அல்லாஹ்வின் மீதும் மறுமை நாள் மீதும் நம்பிக்கை கொண்டிருக்கும் நிலையில் மரணத் தைச் சந்திக்கட்டும். தன்னிடம் மக்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென அவர் விரும்புகிறாரோ அப்படியே அவரும் மக்களிடம் நடந்து கொள்ளட்டும்"

மேலும் ஒருவர் இமாம் எனும் தலைவரிடம் கையில் கை பதித்து விசுவாசப் பிரமாணம் செய்து கொடுத் தால் - உள்ளத்தால் அன்பும் செலுத்தினால் முடிந்த வரையில் அவருக்குக் கீழ்ப்படிந்து நடக்கட்டும். இந்நிலையில் வேறொருவர் வந்து அவரிடம் தர்க்கம் செய்து கலகம் விளைவித்தால் அந்த வேறொருவரின் கழுத்தை வெட்டி வீழ்த்தட்டும்" [25]

நபி(ஸல்) அவர்களிடம் ஒருமனிதர் வந்து, அல்லாஹ்வின் நபியே! தாங்கள் என்ன கருதுகிறீர்கள்? எங்கள் மீது அமீர்கள் ஆட்சி செலுத்தினால், அவர்களின் உரிமையை எங்களிடம் கேட்கிறார்கள்., அதே நேரத்தில் எங்கள் உரிமையை எங்களுக்குத் தர மறுக்கிறார்கள் என்றால் எங்களுக்கு நீங்கள் தரும் கட்டளை என்ன? என்று கேட்டார். அந்த மனிதரை நபி(ஸல்)அவர்கள் கண்டுகொள்ளவில்லை. பிறகு இரண்டாவது முறையும் நபியவர்களிடம் அதே கேள்வியை அவர் கேட்டார். அப்பொழுது நபியவர்கள் சொன்னார்கள்: செவியேற்றுக் கீழ்ப்படிந்து நடங்கள். அவர்களிடம் ஒப்படைக்கப்பட்ட கடமைகள் அவர்கள் மீது உள்ளன. உங்களிடம் ஒப்படைக்கப்பட்ட பொறுப்புகள் உங்கள் மீது உள்ளன" [26]

ஆட்சியாளர்களுக்கு மக்கள் செய்ய வேண்டிய கடமைகளில் மற்றொன்று அவர்கள் மேற்கொள்ளும் திட்டப் பணிகளில் அவர்களோடு உறுதுணையாக இருக்க வேண்டும்., அதிகாரிகளிடம் ஒப்படைக்கப்பட்ட காரியங் களை நிறைவேற்றும் வகையில் மக்கள் ஒத்துழைப்பு நல்கிட வேண்டும். ஒவ்வொருவரும் சமுதாயத்தில் தம் பங்களிப் பையும் பொறுப்பையும் அறிந்திடவேண்டும். அப்பொழுதுதான் ஒவ்வொரு காரியமும் முறையாக நடை பெற்றுக் கொண்டிருக்கும். ஆட்சியாளர்கள் தம் பொறுப்புகளை நிறைவேற்றும் வகையில் மக்கள் ஒத்துழைப்பு நல்கவில்லையானால் எந்தக் காரியமும் முறையாக நடைபெறாது.

## 8 - அண்டை வீட்டாருக்குச் செய்ய வேண்டிய கடமைகள்

இவர் உங்களுக்கு அருகில் குடியிருப்பவர். எனவே நீங்கள் அவருக்குப் பெரிதும் கடமைப்பட்டுள் ளீர்கள். அவர் முஸ்லிம் என்பதுடன் குடும்ப ரீதியில் உங்கள் உறவினராகவும் இருந்தால் அவருக்கு மூன்று உரிமைகள் உள்ளன: அண்டை வீட்டின் உரிமை, உறவினர் உரிமை, இஸ்லாத்தின் உரிமை.

[24] புகாரீ. பாகம்: ஜிஹாதும் வாழ்க்கை வரலாறுகளும். பாடம்: தலைவர் சொல் செவியேற்றல், கீழ்ப்படிதல். (எண் 2955) முஸ்லிம். பாகம்: ஆட்சி யதிகாரம். பாடம்: பாவமல்லாதவற்றில் தலைவர்களுக்குக் கீழ்ப்படிவது கடமை, பாவமான காரியத்தில் கீழ்ப்படிவது விலக்கப்பட்டது. (எண் 1839)

[25] முஸ்லிம். பாகம்: ஆட்சியதிகாரம். பாடம்: கலீஃபாக்களிடம் - முதலா மவரிடம் பிறகு மற்றவரிடம் எனும் முறையில் விசுவாசப்பிரமாணம் செய்து கொடுப்பது கடமை. (எண் 1844)

[26] முஸ்லிம். பாகம்: ஆட்சியதிகாரம். பாடம்: உரிமைகளை மறுத்தாலும் அமீர்களுக்குக் கீழ்ப்படிவது பற்றி (எண் 1846)

அவர் முஸ்லிம்., ஆனால் உறவினர் அல்லர் என்றால் அண்டை வீட்டு உரிமை, இஸ்லாத்தின் உரிமை எனும் இரண்டு உரிமைகள் அவருக்கு உண்டு.

அவர் உறவினர்தான்., ஆனால் முஸ்லிம் இல்லை என்றால் அண்டை வீட்டு உரிமை, உறவின் உரிமை என இரண்டு உரிமைகள் அவருக்குண்டு. அவர் உறவினரும் அல்லர்., முஸ்லிமாகவும் இல்லை என்றால் ஓர் உரிமை அவருக்கு உண்டு. அதுதான் அண்டைவீட்டின் உரிமை.[♦] அல்லாஹ் கூறுகிறான்:

قال تعالى: وَبِالْوَالِدَيْنِ اِحْسَانًا وَبِذِى الْقُرْبَى وَالْيَتَامَىٰوَالْمَسَاكِيْنِ وَالْجَارِ ذِى الْقُرْبَى وَالْجَارِى الْجُنُبِ (سورة النساء ٣٦)

மேலும் தாய்தந்தையரிடம் நல்ல விதமாக அன்புடன் நடந்து கொள்ளுங்கள். மேலும் உறவினர்கள், அநா தைகள், வறியவர்கள் ஆகியோருடனும் நல்ல விதமாக நடந்து கொள்ளுங்கள். மேலும் உறவினரான அண்டை வீட்டார், அந்நியரான அண்டை வீட்டாருடனும் நல்ல விதமாக நடந்து கொள்ளுங்கள்" (4 : 36)

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்: அண்டை வீட்டாருடன் நல்ல விதமாக நடந்து கொள்ளு மாறு வானவர் ஜிப்ரீல் தொடர்ந்து எனக்கு அறிவுறுத்திக் கொண்டே இருந்தார்., அவரை வாரிசாக ஆக்கிவிடு வாரோ என்று நான் கருதும் அளவுக்கு (அது இருந்தது)" (நூல்: புகாரி) [27]

அண்டை வீட்டாருக்குரிய மற்றோர் உரிமை யாதெனில், பொருள், பதவி, பயன்பாடு ஆகியவற்றால் முடிந்த வரையில் அவருக்கு உபாகாரம் செய்திட வேண்டும். நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்:

قال رسول الله ﷺ : خَيْرُ الْجِيْرَانِ عِنْدَ اللهِ خَيْرُهُمْ لِجَارِهِ

அண்டை வீட்டார்களிலேயே அல்லாஹ்விடத்தில் மிகச் சிறந்தவர் யாரெனில், எவர் தன்னுடைய அண்டை வீட்டா ரிடம் நல்லவராக உள்ளாரோ அவர்தான்" [28] - மேலும் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்:

قال الله تعالى : مَنْ كَانَ يُؤْمِنُ بِاللهِ وَالْيَوْمِ الآخِرِ فَلْيُحْسِنِ اِلَى جَارِهِ (رواه مسلم)

எவர் அல்லாஹ்வின் மீதும் மறுமை நாள் மீதும் நம்பிக்கை கொண்டாரோ அவர் தன் அண்டை வீட்டாரிடம் நல்ல விதமாக நடந்து கொள்ளட்டும்" [29] - மேலும் கூறினார்கள்:

قال الله تعالى : اِذَا طَبَخْتَ مِرْقَةً فَاَكْثِرْ مَاءَهَا وَتَعَاهَدْ جِيرَانَكَ (رواه مسلم)

(உணவுக்காக) நீ குழம்பு தயார் செய்தால் அதில் தண்ணீரை அதிகப்படுத்தி உன் அண்டை வீட்டாரை யும் கவனித்துக் கொள்" [30]

அண்டை வீட்டாருடன் நல்ல விதமாக நடந்து கொள்வதன் மற்றொருவகை, விஷேச நாட்களில் அவர் களுக்கு அன்பளிப்புகள் வழங்குவதாகும். அன்பளிப்புச் செய்வது அன்பை ஏற்படுத்திப் பகைமையை அகற்றக் கூடியதாகும்.

அண்டை வீட்டாருக்குரிய மற்றோர் உரிமையாதெனில், சொல் மற்றும் செயல் ரீதியாக அவர்களுக்குத் தொல்லை தராமல் இருக்க வேண்டும்.

நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவன் இறைநம்பிக்கையாளனாக ஆக மாட்டான். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவன் இறை நம்பிக்கையாளனாக ஆக மாட்டான். அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவன் இறைநம்பிக்கையாளனாக ஆக மாட்டான். அப்பொழுது, அல்லாஹ்

---

[♦] அபூ பக்ர் பஸ்ஸார் அவர்கள், ஹஸனிடம் இருந்தும் ஹஸன், ஜாபிர் பின் அப்துல்லாஹ்விடம் இருந்தும் அறிவித்துள்ள ஒரு நபிமொழியில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது. இதனை இப்னு கஸீர் அவர்கள் 4 : 36 ஆம் வசனத்தின் விளக்க உரையில் கூறியுள்ளார்கள்.

[27] புகாரி. பாகம்: நல்லொழுக்கம். பாடம்: அண்டை வீட்டாருடன் நல்லவிதமாக நடப்பதற்கு அறிவுறுத்தப்பட்டவர்கள். (எண் 6015) முஸ்லிம். பாகம்: நன்மை செய்தல், இணைந்து வாழ்தல், நல்லொழுக்கங்கள். பாடம்: அண்டை வீட்டாருடன் நல்லவிதமாக நடக்கவும் நல்லுபகாரம் செய்யவும் அறிவுரை கூறல். (எண் 2624 , 2625)

[28] திர்மிதி. பாகம்: நன்மை செய்தல், இணைந்து வாழ்தல். பாடம்: அண்டை வீட்டாரின் உரிமை பற்றி. (எண் 1944) அஹ்மத். (எண் 2 - 167) அப்து பின் ஹு மைத் (எண் 342) திர்மிதி கூறுகிறார்: இது ஹஸன் கஃரீப் தரத்திலானது. ஸஹீஹு ல் ஜாமிஉ - வில் அல்பானி இதனை ஸஹு ஹ் என்று கூறியுள்ளார். (எண் 3270)

[29] புகாரி. பாகம்: நல்லொழுக்கம். பாடம்: அல்லாஹ்வின் மீதும் மறுமை நாள் மீதும் நம்பிக்கை கொண்டவன் அண்டை வீட்டா ருக்குத் தொல்லை கொடுக்க மாட்டான். (எண் 6019) முஸ்லிம். பாகம்: ஈமான். பாடம்: அண்டை வீட்டாருக்கும் விருந்தினருக்கு கண்ணியம் அளித்தல், மௌனமாக இருத்தல். (எண் 48)

[30] முஸ்லிம். பாகம்: நன்மை செய்தல், இணைந்து வாழ்தல், நல்லொழுக்கங்கள். பாடம்: அண்டை வீட்டாருடன் நல்லவிதமாக நடத்தல், அவர்களுக்கு நல்லுபகாரம் செய்தல் பற்றி அறிவுரை கூறல். (எண் 2625. 142)

வின் தூதரே! யார் அவன்? என்று தோழர்கள் கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள்,எவனது தீமை களை விட்டும் அவனது அண்டை வீட்டார் பாதுகாப்புப் பெறவில்லையோ அவன்தான் என்றார்கள்"[31]

மற்றோர் அறிவிப்பில் உள்ளது: எவனது தீமைகளை விட்டும் அவனுடைய அண்டைவீட்டார் பாதுகாப்புப் பெற வில்லையோ அவன் சுவனபதி புகமாட்டான்"[32]

எனவே அண்டை வீட்டாருக்குத் தீங்கு செய்து கொண்டு அவர்களை நிம்மதியாக வாழவிடாமல் இருப் பவன் யாரோ அவன் இறைநம்பிக்கையாளனும் அல்லன். அவன் சுவனம் புகவும் மாட்டான்.

இப்பொதெல்லாம் பெரும்பாலான மக்கள் அண்டை வீட்டாரின் உரிமைகளுக்கு முக்கியத்துவம் கொடுப்ப தில்லை. அருகில் வாழும் மக்கள், அவர்களின் தீமைகளை விட்டும் நிம்மதியாக வாழமுடிவதில்லை. அண்டை வீட்டாருடன் இவர்கள் தொடர்ந்து சண்டை போட்டுக்கொண்டும் பிளவுபட்டுக்கொண்டும் இருப்பதை நீங்கள் காணலாம். உரிமைகளை அநியாயமாக அபகரிப்பதையும் சொல்லால் - செயலால் தொல்லை கொடுப்பதையும் நீங் கள் காணலாம். இவை அனைத்தும் அல்லாஹ் மற்றும் ரஸூலின் கட்டளைகளுக்கு முரணானவை. முஸ்லிம்கள் பிளவுபட்டு போவதற்கும் அவர்களிடையே பகைமை ஏற்படுவதற்கும் ஒருவரின் கண்ணியத்தை ஒருவர் குலைப் பதற்கும்தான் அது வழிவகுக்கும்.

## 9 - அனைத்து முஸ்லிம்களுக்கும் செய்ய வேண்டிய கடமைகள்

இந்த உரிமைகள் பற்றி அதிகம் கூறப்பட்டுள்ளன. பின்வரும் ஆதாரப்பூர்வமான நபிமொழியில் விவரிக்கப் பட்டுள்ள உரிமைகளும் அவற்றுள் அடங்கும்.

ஒரு முஸ்லிம் பிற முஸ்லிம்க்கு செலுத்த வேண்டிய உரிமைகள் ஆறு: நீங்கள் அவரை சந்திக்கும் பொழுது ஸாலாம் சொல்ல வேண்டும். அவர் உங்களை அழைத்தால் அதற்கு நீங்கள் பதில் அளிக்க வேண்டும். அவர் உங்களிடம் நல்லுரை கேட்டால் நீங்கள் அவருக்கு நல்லுரை நல்கிட வேண்டும். அவர் தும்மினால், **அல் ஹம்து லில்லாஹ்** (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே) என்று புகழ்ந்தால், **யர்ஹமு (க்) கல்லாஹ்** (அல்லாஹ் உமக்கு அருள்புரிவானாக) என்று நீங்கள் சொல்ல வேண்டும். அவர் நோயுற்றால் அவரைச்சந்தித்து நலம் விசாரிக்க வேண்டும். அவர் மரணம் அடைந்தால் அவரை நீங்கள் பின் தொடர வேண்டும்"[33]

இந்நபிமொழியில் பல கடமைகள் விளக்கப்பட்டுள்ளன. முதல் கடமை: ஸலாம் சொல்லுதல். ஸலாம் சொல்வது கண்டிப்பான ஸுன்னத் ஆகும். முஸ்லிம்களின் இதயங்கள் இணைவதற்கும் அவர்களிடையே அன்பு மலர் வதற்கும் அதுவே வழிவகுக்கும். நடைமுறை நிகழ்ச்சிகளே இதற்குச் சான்று. இந்த நபி மொழி எடுத்துரைப் பதும் அதுவே.

அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நீங்கள் இறைவிசுவாசம் கொள்ளாத வரையில் சுவனம் செல்ல மாட் டீர்கள். ஒருவருக்கு ஒருவர் அன்பு செலுத்தாத வரை நீங்கள் ஈமான் - நம்பிக்கை கொள்ள மாட்டீர்கள். நான் உங்களுக்கு ஒன்றை அறிவித்துத்தரட்டுமா? அதனை நீங்கள் செயல் படுத்தினால் ஒருவருக்கு ஒருவர் அன்பு செலுத்துவீர்கள். (ஆம்) ஸலாம் சொல்வதை உங்களுக்கு மத்தியில் பரவ லாக்குங்கள்"[34]

நபி (ஸல்) அவர்கள், ஒருவரைச் சந்தித்தால் தாமே முதலில் ஸலாம் சொல்வார்கள். வழியில் சிறுவர்களைக் கண்டால் அவர்களுக்கும் ஸலாம் சொல்வார்கள்.

நபிவழி யாதெனில், சிறுவர்தான், பெரியவருக்கு ஸலாம் சொல்ல வேண்டும். குறைந்த நபர்கள்தான் அதிக எண்ணிக்கையில் உள்ளோருக்கு ஸலாம் சொல்ல வேண்டும். வாகனத்தில் இருப்பவர்தான் நடந்து வருப வருக்கு ஸலாம் சொல்ல வேண்டும். ஆனாலும் இந்த முறையை அதற்குரியவர்கள் பேணிடவில்லை யெனில் மற்றவர்கள் அதனை நடைமுறைப்படுத்திட வேண்டும். ஏனெனில் ஸலாம் சொல்லும் முறை பாழாகிவிடக்

---

[31] **புகாரி. பாகம்: நல்லொழுக்கம். பாடம்: எவனது தீமைகளை விட்டும் அவனுடைய அண்டைவீட்டார்கள் பாதுகாப்புப் பெறமாட்டார்களோ அவனது பாவம். (எண் 6061)**

[32] **முஸ்லிம். பாகம்: ஈமான். பாடம்: அண்டை வீட்டினருக்குத் தொல்லை கொடுப்பது விலக்கப்படுதல். (எண் 46)**

[33] **முஸ்லிம். பாகம்: ஸலாம். பாடம்: ஒரு முஸ்லிமுக்கு மற்றொரு முஸ்லிம் செய்ய வேண்டிய கடமை ஸலாமுக்கு பதில் சொல்லுதல். (எண் 2162) இமாம் புகாரி அவர்கள் இதேபோன்ற வாசக அமைப்பில்தான் அறிவித்துள்ளார்கள். ஆறு என்பதற்கு பதில் ஐந்து என்றுள்ளது. பாகம்: ஜனாஸாவின் சட்டங்கள்.பாடம்: ஜனாஸாவை அடக்கம் செய்யும் காரியங்களில் கலந்து கொள்ளச் செல்லுதல். (எண் 1240)**

[34] **முஸ்லிம். பாகம்: ஈமான். பாடம்: இறைநம்பிக்கையாளர்கள் தவிர வேறு யாரும் சுவனம் செல்லமுடியாது என்பது பற்றியும் இறைநம்பிக்கையாளர் களை நேசிப்பது ஈமானில் சேர்ந்ததாகும் என்பதையும் விளக்குதல். (எண் 54)**

கூடாது! சிறுவர் ஸலாம் சொல்லவில்லையெனில் பெரியவர் ஸலாம் சொல்லட்டும். குறைவான நபர்கள் ஸலாம் சொல்லவில்லையெனில் அதிக எண்ணிக்கை உடையவர்கள் ஸலாம் சொல்லட்டும். கூலியை அவர்கள் அள்ளிச் செல்லட்டும்!

அம்மார் பின் யாஸிர் (ரலி) அவர்கள் கூறினார்கள்: ஒருவரிடம் மூன்று குணங்கள் ஒன்றிணைந்தால் அவர் ஈமான்- இறைநம்பிக்கையை பரிபூரணமாக்கியவர் ஆவார். மனச்சாட்சிக்கு நியாயமாக நடப்பது, எல்லா மக்களுக்கும் ஸலாம் கூறுவது, நெருக்கடியின் போதும் (இறைவழியில்) செலவு செய்வது"

ஸலாம் சொல்வது ஸு ன்னத் - நபிவழி எனும்பொழுது அதற்கு பதில் ஸலாம் சொல்வது கூட்டுக் கடமை யாகும். ஒருவர் பதில் சொல்வது அனைவர் சார்பாகவும் போது மானதாகும். அதாவது ஒரு குழுவினரை நோக்கி ஸலாம் சொல்லப்பட்டால் - ஒருவர் மட்டும் பதில் சொன்னால் மற்றவர்கள் சார்பாகவும் அது போது மானதாகும். திருக்குர்ஆனில் அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى :وَإِذَا حُيِّيْتُمْ بِتَحِيَّةٍ فَحَيُّوْا بِأَحْسَنَ مِنْهَا أَوْ رُدُّوْهَا (سورة النساء ٨٦)

மேலும் உங்களுக்கு ஸலாம் (எனும் வாழ்த்து) கூறப் பட்டால் நீங்கள் அதை விட அழகிய முறையில் அல்லது (குறைந்த பட்சம்) அதைப் போன்றாவது பதில் ஸலாம் கூறுங்கள்" (4 : 86)

ஸலாத்திற்கு பதில் கூறும்பொழுது **அஹ்லன்(வ்) வ ஸஹ்லன்** ♦ என்று மட்டும் சொன்னால் அது போதுமாகாது. ஏனெனில் அது அதை விடவும் அழகான பதிலாகவோ அதைப் போன்றதாகவோ ஆகாது. **அஸ்ஸலாமு அலைக்கும்** என்று சொல்லப்பட்டால் நீங்கள் **வ அலைக்கு முஸ்ஸலாம்** என்றுதான் சொல்ல வேண்டும். அத்துடன், **வ அஹ்லன்** என்று சொல்லப்பட்டால் நீங்களும் அதேபோல் **வ அலைக்கு முஸ்ஸலாம்** என்பதுடன் **வ அஹ்லன்** என்று கூறலாம். ஏனைய வாழ்த்துச் சொற்களையும் சேர்த்தால் அது மிகச் சிறந்த தாகும்.

இரண்டாவது உரிமை: **அவர் உங்களை அழைத்தால் அதற்கு பதில் சொல்லுங்கள்.** அதாவது விருந் துக்கோ வேறு ஏதேனும் நிகழ்ச்சியை முன்னிட்டோ வீட்டுக்கு உங்களை அழைத்தால் அதனை ஏற்று அங்கு செல்லத் தான் வேண்டும். அழைப்புக்குப் பதில் சொல்வது கண்டிப்பான ஸு ன்னத் - நபிவழியாகும். ஏனெ னில் அதில் - அழைப்பவரின் மனத்தைத் திருப்திப்படுத்தலும் அன்பையும் பாசத்தையும் வரவழைத்தலும் உள்ளன. ஆனால் திருமண விருந்து இதிலிருந்து வித்தியாசமானதாகும். ஏனெனில் அதற்கான அழைப்புக் குப் பதிலளிப்பது கடமையாகும்., அதற்கென உள்ள நிபந்தனைகள் இருக்கும் பட் சத்தில்! ஏனெனில் அது பற்றி நபி(ஸல்) அவர்கள் அருளியுள்ளார்கள்: எவர் அந்த அழைப்பை ஏற்று அதில் கலந்து கொள்ள வில்லையோ அவர் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாற்றமாக நடந்தவர் ஆவார்" [35]

மேலே சொன்ன நபிமொழியில் வரும் - அவர் உங்களை அழைத்தால் அதற்கு நீங்கள் பதில் அளிக்க வேண்டும்" எனும் வாசகம் தனக்கு உதவி - ஒத்துழைப்பு நல்குமாறு அவர் அழைப்பதையும் உள்ளடக்க லாம். அதனை ஏற்று அவருக்கு உதவிசெய்யுமாறு உங்களுக்குக் கட்டளை இடப்படுகிறது. ஒரு பொருளைச் சுமப்பது அதனை எடுத்துப்போடுவது போன்ற உதவிக்காக உங்களை அவர் அழைத்தால் அதைச் செய்து கொடுக்கும் கடமை உங்களுக்கு உண்டு. ஏனெனில் நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்: ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமுக்கு - ஒரு பகுதி மற்றொரு பகுதியை இணைத்துக் கொண்டிருக்கும் ஒரு கட்டிடத்தைப் போன்றாவார்" [36]

மூன்றாவது உரிமை: **அவர் உங்களிடம் அறிவுரை தேடினால் அவருக்கு நீங்கள் அறிவுரை கூறுங்கள்.** அதாவது அவர் உங்களிடம் வந்து உங்களது அறிவுரையை நாடினால் அவருக்கு அறிவுரை கூறுங்கள். ஏனெனில் இது இறைமார்க்கத்தின் வழிகாட்டலாகும்.

---

♦ ஆங்கிலத்தில் Good morning என்று என்று கூறுவது போன்று அஸ்ஸலாமு அலைக்கும் என்பதுடன் - ஸபாஹு ல் கைர் (நலன் மிக்க காலைப்பொழுது) என்றும் அஹ்லன் வ ஸஹ்லன் (உள்ளம் விரும்பும் - சொந்த இடத்திற்கே வருகை தந்துள்ளீர்கள்) என்றும் முகமன் கூறும் பழக்கம் அரபுகளிடம் உள்ளது. அதைக் கருத்தில் கொண்டு எழுதப்பட்டதாகும் இது. (மொழி பெயர்த்தோன்)

[35] முஸ்லிம். பாகம்: திருமணம். பாடம்: விருந்துக்கு அழைப்பவருக்கு பதிலளிக்குமாறு ஏவுதல். (எண் 110) புகாரி இமாம் திருமணம் எனும் பகுதியில் விருந்து அழைப்பைப் புறக்கணித்தவன் அல்லாஹ்வுக்கும் ரஸூ லுக்கும் மாற்றமாக நடந்தவன் ஆவான் எனும் பாடத்தில் இதே கருத்துடன் இந்நபிமொழியை அறிவித்துள்ளார்கள். (எண் 5177)

[36] புகாரி. பாகம்: அநீதிகள். பாடம்: அநீதிக்குள்ளானவனுக்கு உதவுதல் (எண் 2446) முஸ்லிம். பாகம்: நன்மை செய்தல், இணைந்து வாழ்தல், நல்லொழுக்கங்கள். பாடம்: இறைநம்பிக்கையாளர்கள் பரஸ்பரம் அன்பு பாராட்டியும் பரிவுகாட்டியும் உறு துணையாகவும் வாழ்வது (எண் 2585)

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: தீன் - இறைமார்க்கம் என்பது அல்லாஹ்வுக்கும் அவனது வேதத்திற்கும் அவ னுடைய தூதருக்கும் முஸ்லிம்களின் தலைவர்களுக்கும் முஸ்லிம் பொதுமக்கள் அனைவருக்கும் நலன் நாடுவதே ஆகும்" [37]

நல்லுரை கூறும்படி உங்களை அவர் தேடி வரவில்லை எனில் - அவர் செய்யப்போகும் காரியத்தில் கேடு அல்லது பாவம் அவருக்கு ஏற்படும் என்றிருந்தால் அவருக்கு நல்லுரை கூறுவது உங்கள் மீது கடமையே, அவர் உங்க ளிடம் வராவிட்டாலும் சரியே! ஏனெனில் ஒரு தீங்கை - வெறுக்கத்தக்க நிலையை முஸ்லிம் களை விட்டு அப்புறப்படுத்தும் பணிகளில் சேர்ந்ததாகும் இது.

அவர் செய்யப்போகும் செயலினால் அவருக்கு எவ்வித் தீங்கோ பாவமோ ஏற்படாது என்றிருந்தால் - ஆனா லும் வேறுவிதமாகச் செயல்படுவதுதான் அவருக்கு மிகவும் பயனுள்ளது என்று நீங்கள் கருதினால் அவருக்கு எதுவும் கூறுவது உங்கள் கடமை இல்லை. அவர் உங்களைத் தேடி வந்து அறிவுரை கேட்டாலே தவிர! அப்படிக்கேட்டு வந்தால் நல்லுரை கூறுவது உங்களுக்கு அவசியமாகும்.

நான்காவது உரிமை: அவர் தும்மினால், அல் ஹம்து லில்லாஹ் (எல்லாப்புகழும் அல்லாஹ்வுக்கே)என்று புகழ்ந் தால், யர்ஹமு (க்)கல்லாஹ் (அல்லாஹ் உமக்கு அருள் புரிவானாக) என்று நீங்கள் சொல்ல வேண்டும்.

அவர் தும்மியபோது இறைவனைப் புகழ்ந்ததற்காக அவருக்கு செலுத்தும் நன்றியாகும் இது. ஆனால் தும்மிய பொழுது அல்லாஹ்வை அவர் புகழவில்லை எனில் அவருக்கு பதில் சொல்ல வேண்டியதில்லை.

தும்மியவர் அல்லாஹ்வைப் புகழ்ந்தால் அவருக்கு **யர்ஹமுகல்லாஹ்** என்று பதில் கூறுவது கடமை. பிறகு அதற்கு பதிலளிப்பது தும்மியவர் மீது கடமை. யஹ்தீ(க்) குமுல்லாஹு வ யுஸ்லிஹ் பால(க்)கும் (பொருள்: அல்லாஹ் உங்களுக்கு நேர்வழி காட்டுவானாக, உங்கள் நிலைமையைச் சீர்படுத்துவானாக) என்று அவர் கூற வேண்டும்.

தொடர்ந்து அவர் தும்மிக்கொண்டிருந்தால் - மூன்று முறை அவருக்கு நீங்கள் பதில் அளித்துவிட்டீர்கள் என்றால் நான்காவதுமுறை அவருக்கு நீங்கள் சொல்லும் பதில் **ஆFபாக்கல்லாஹ்** - அல்லாஹ் உமக்கு சுகம் அளிப் பானாக என்பதே. யர்ஹமுகல்லாஹ் என்று நீங்கள் சொல்ல வேண்டியதில்லை.

ஐந்தாவது உரிமை: அவர் நோயுற்றுவிட்டால் அவரைச் சந்தித்து நீங்கள் நலம் விசாரிக்க வேண்டும். இவ்வாறு நோயாளியைச் சந்தித்து நலம் விசாரிப்பது முஸ்லிம்கள் மீது அவருக்குச் செய்ய வேண்டிய உரிமை ஆகும்.

அதேநேரம் நோயாளிக்கு நீங்கள் உறவினராக, நண்பராக, அண்டை வீட்டாராக இருந்தால் அவரை நீங்கள் சந்தித்து நலம் விசாரிப்பது இன்னும் அவசியமாகும்.

நலம் விசாரித்தல் என்பது நோயாளியின் நிலைமை மற்றும் நோயின் தன்மையைப் பொறுத்து அமைவ தாகும். அடிக்கடி அவரைச் சந்திப்பது அவசியம் எனும் நிலை இருக்கலாம் அல்லது ஓரிரு தடவையுடன் நிறுத்திக் கொள்ள வேண்டும் என்றிருக்கலாம். நிலைமைக்கு ஏற்ப அவரைச் சென்று பார்க்க வேண்டும்.

நோயாளியைச் சந்திப்பவர், அவரது உடல் நிலை குறித்து விசாரிப்பதும் அவருக்காக பிரார்த்தனை செய்வ தும் அவருக்கு மனஆறுதல் ஊட்டுவதும் மகிழ்ச்சி ஏற்படுத்துவதும் விரைவில் நோய் குணமாகிவிடும் என்கிற நல்லாதரவை உருவாக்குவதும் ஸு ன்னத் - நபிவழி யாகும். அதுவே ஆரோக்கியத்தையும் நிவா ரணத்தையும் ஏற்படுத்தக் கூடிய காரணிகளுள் மிகப் பெரியதாகும்.

தௌபா- பாவமன்னிப்புத் தேடுதலை நினைவூட்டுவது அவசியம். ஆனால் அது அவருக்குப் பீதியை ஏற்படுத் தாத முறையில் இருக்க வேண்டும். எடுத்துக்காட்டாக, அவரிடம் இப்படிக் கூறிட வேண்டும்:

✡ உங்களுக்கு ஏற்பட்டிருக்கும் இப்பிணியில் நீங்கள் நன்மையைச் சம்பாதிக்கலாம் -ஏனெனில் நோயின் மூலம் அல்லாஹ் தவறுகளை மாய்க்கிறான். தீமைகளைத் துடைத்தெறிகிறான்.

✡ நீங்கள் முடங்கியிருக்கும் நேரத்தில் அதிகமாக திக்ர் செய்வது, பாவமன்னிப்புத் தேடுவது, பிரார்த் தனை செய்வது ஆகியவற்றின் மூலம் ஏராளமான கூலிகளை நீங்கள் சம்பாதித்துக்கொள்ளலாம்.

ஆறாவது உரிமை:அவர் மரணம் அடைந்தால் அவரை நீங்கள் பின்தொடர்ந்து செல்ல வேண்டும். அதா வது அவரை நல்லடக்கம் செய்யும் காரியங்களில் கலந்து கொள்வதற்காக ஜனாஸாவை பின் தொடர்ந்து

---

[37] **புகாரி. பகுதி: ஈமான். பாடம்: தீன் என்பது நலம் நாடுவதே எனும் நபிமொழி .... (பக்கம் 35) பதிப்பு: பைத்துல் அ:.ப்காரித் துவலிய்யா. முஸ்லிம். மதீமுத் தாரி (ரலி) அவர்கள் மூலம் நபிகளார் வரையில். பாடம்: தீன் என்பது நலம் நாடுவதே என்பதன் விளக்கம். (எண் 55)**

செல்வ தென்பது அவருக்குச் செலுத்த வேண்டிய ஓர் உரிமை ஆகும். அல்லாஹ்விடத்தில் அதற்குப் பெரும் கூலி உண்டு. நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்:

قَالَ رَسُوْلُ اللهِ ﷺ : مَنَ تَبِعَ الْجَنَازَةَ حَتَّى يُصَلَّى عَلَيْهَا فَلَهُ قِيْرَاطٌ وَمَنْ تَبِعَهَا حَتَّى تُدْفَنَ فَلَهُ قِيْرَاطَانِ قِيْلَ وَمَا الْقِيْرَاطَانِ؟ قَالَ مِثْلَ الْجَبَلَيْنِ الْعَظِيْمَيْنِ

தொழுகை நடத்தப்படும் வரையில் ஜனாஸா நிகழ்ச்சி யில் கலந்து கொள்பவருக்கு **ஒருகீறாத்** நன்மை உண்டு. ஜனாஸா அடக்கம் செய்யப்படும் வரையில் கலந்து கொள் பவருக்கு **இரு கீறாத்** நன்மை உண்டு. அப்பொழுது நபியவர்களிடம் -கீறாத் என்றால் என்ன? என்று கேட்கப்பட்டது. அதற்கு நபியவர்கள் சொன் னார்கள்: பிரமாண்டமான இரண்டு மலைகளைப் போன்ற கூலியாகும்" [38]

ஏழாவது உரிமை: ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமுக்குச் செய்ய வேண்டி கடமைகளில் ஒன்று அவருக் குத் தொல்லை தராதிருப்பதாகும். ஏனெனனில் முஸ்லிம்களுக்குத் தீங்கிழைப்பது பெரும் பாவமாகும். அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى : وَالَّذِيْنَ يُوْذُوْنَ الْمُؤْمِنِيْنَ وَالْمُؤْمِنَاتِ بِغَيْرِمَا اكْتَسَبُوْا فَقَدِاحْتَمَلُوْا بُهْتَانًا وَّاِثْمًا مُبِيْنًا (الأحزاب ٥٨)

மேலும் இறைநம்பிக்கைகொண்ட ஆண்கள் மற்றும் பெண்களுக்கு -அவர்கள் குற்றம் புரியாதிருக்கவே - யார் துன்பம் கொடுக்கிறார்களோ அவர்கள் பெரும் அவதூறையும் பெரும் பாவத்தையும் தங்கள் மீது சுமந்து கொள்கிறார்கள்" (33 : 58)

பெரும்பாலும் நடைபெறுவது என்னவெனில் எவர் தன்னுடைய சகோதரர் மீது தீங்கு நிகழக் காரணமாக இருக்கிறாரோ அவரை மறுமைக்கு முன்னர் இவ்வுலகிலேயே நிச்சயம் அல்லாஹ் பழிவாங்கி விடுகிறான்.

قَالَ رَسُوْلُ اللهِ ﷺ : لاَ تَبَاغَضُوْا وَ لاَ تَدَابَرُوْا وَ كُوْنُوْا عِبَادَ اللهِ اِخْوَانًا، اَلْمُسْلِمُ اَخُوالْمُسْلِمِ لاَيَظْلِمُهُ وَلاَ يَخْذُلُهُ وَلاَ يَحْقِرُهُ ،بِحَسْبِ امْرَيءِ مُسْلِمٍ مِنَ الشَّرِّ اَنْ يَحْقِرَاَخَاهُ الْمُسْلِمَ ،كُلُّ الْمُسْلِمِ عَلَىالْمُسْلِمِ حَرَامٌ :دَمُهُ وَمَالُهُ وَعِرْضُهُ

நபி(ஸல்)அவர்கள் கூறினார்கள்: நீங்கள் ஒருவருக்கு ஒருவர் கோபம் கொள்ளாதீர்கள். பிணங்கிக் கொள்ளா தீர்கள். அல்லாஹ்வின் அடியார்களே! ஒருவருக்கு ஒருவர் (அன்பு காட்டுவதில்) சகோதரர்களாக இருங்கள். ஒரு முஸ்லிம், பிற முஸ்லிமின் சகோதரர். எனவே அவருக்கு அநீதி இழைக்கக் கூடாது., அவரை ஆதரவின்றி விட்டு விடக் கூடாது. அவரை இழிவாகக் கருதக்கூடாது. ஒரு மனிதன் தீயவன் என்பதற்கு - தன் முஸ்லிம் சகோதரரை இழிவாகக் கருதுவதே போதுமானதாகும். பிற முஸ்லிமின் உயிர், உடமை மற்றும் சுய மரியாதைக்குப் பாதுகாப்பு அளிப்பது முஸ்லிம்கள் அனைவர் மீதும் கடமையாகும்" [39]

ஒரு முஸ்லிம் தம் சகோதரருக்குச் செலுத்த வேண்டிய உரிமைகள் ஏராளம் உள்ளன. ஆயினும் ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமின் சகோதரன் ஆவான்" (நூல்: முஸ் லிம்) எனும் நபிமொழி அவை அனைத்தையும் உள்ள டக்கும் ஒருங்கிணைந்த கருத்தாகத் திகழ்கிறது,

எனவே இத்தகைய சகோதரத்துவத்தின் தேட்டத்தை நிறைவேற்ற வேண்டுமானால் தமது சகோதரனுக்கு எல்லா நன்மைகளும் கிடைக்கச் செய்வதில், அவனுக்குத் தீங்களிக்கும் காரியங்களைத் தவிர்ப்பதில் முஸ்லிம்கள் முனைப்புடன் ஈடுபட வேண்டும்.

## 10 - முஸ்லிமல்லாதாருக்குச் செய்ய வேண்டிய கடமைகள்

முஸ்லிமல்லாதார் என்றால், அதில் இறைநிராகரிப்பாளர்கள் அனைவரும் அடங்குவர். அவர்கள் நான்கு வகை யில் உள்ளனர். சண்டைக்காரர்கள். பாதுகாப்பு வழங்கப்பட்டவர்கள். ஒப்பந்தக்காரர்கள். அரசின் அனுமதியுடன் வசிப்பவர்கள்.

---

[38] **புகாரி. பாகம்: ஜனாஸாவின் சட்டங்கள். பாடம்: அடக்கம் செய்யும் வரையில் எதிர்பார்த்திருப்பவன். (எண் 1325) முஸ்லிம். பாகம்: ஜனா ஸாவின் சட்டங்கள். பாடம்: ஜனாஸா தொழுகை தொழுவது, அடக்கம் செய்வதில் கலந்து கொள்வதன் சிறப்பு. (எண் 945)**

[39] **புகாரி. (சுருக்கமாக) பாகம்: நல்லொழுக்கம். பாடம்: பொறாமை கொள்வதையும் பிணங்கவதையும் தடுத்தல். (எண் 6065) ஹிஜ்ரத் பற்றிய பாடத்திலும் வந்துள்ளது(எண் 6076) முஸ்லிம்.பாகம்: நன்மை செய்தல், இணைந்து வாழ்வது, நல்லொழுக்கங்கள். பாடம்: ஒரு முஸ்லிமுக்கு அநீதி செய்வதும் ஆதரவளிக்காமல் விடுவதும் கேவலப் படுத்துவதும் ஹராம் - விலக்கப்பட்டதாகும். (எண் 2564)**

சண்டைக்காரர்கள்: பாதுகாப்பு மற்றும் தயவு தாட்சண்யம் என்கிற ரீதியில் நம்மீது இவர்களுக்கு எந்த உரிமையும் கிடையாது.

பாதுகாப்பு வழங்கப்பட்டவர்கள்: அவர்களது அமைதி, பாதுகாப்புக்கென ஒதுக்கப்பட்ட பகுதிகளில் ஒதுக்கப் பட்ட காலத்தில் அவர்களுக்குப் பாதுகாப்பு அளிப்பது நம்மீது கடமையாகும். அல்லாஹ் கூறியுள்ளான்:

قال الله تعالى : وَاِنْ اَحَدٌ مِنَ الْمُشْرِكِيْنَ اسْتَجَارَكَ فَاَجِرْهُ حَتَّى يَسْمَعَ كَلاَمَ اللهِ ثُمَّ اَبْلِغْهُ مَأْمَنَهُ (سورة التوبة ٦)

இணைவைப்பாளர்களில் எவரேனும் அடைக்கலம் தேடி உம்மிடம் வந்தால் அப்போது அல்லாஹ்வின் வேதத்தை அவர் செவியுறும் வகையில் அவருக்கு அடைக்கலம் அளிப்பீராக. பிறகு அவரை அவரது பாது காப்பிடத்தில் சேர்த்துவிடுவீராக" (9 : 6)

ஒப்பந்தக்காரர்கள்: நமக்கும் அவர்களுக்கும் ஒப்பந்தம் நடைபெற்றுள்ள காலம் வரை, ஒப்பந்தத்தில் குறிப்பிடப்பட்ட பகுதிகளில் உடன்படிக்கையை நிறைவேற்றுவது நம்மீதுள்ள கடமையாகும். ஆனால் ஒரு நிபந்தனை: ஒப்பந்தத்தை முறிக்காமல் அதில் அவர்கள் நிலைத் திருக்க வேண்டும். மேலும் நமக்கு எதிராக யாருக்கும் அவர்கள் உதவி செய்யக் கூடாது., நமது தீன் - இறை மார்க்கத்தைக் குறைபடுத்தும் வகையில் செயல்படக் கூடாது. அல்லாஹ் கூறியுள்ளான்:

قال الله تعالى : اِلاَّ الَّذِيْنَ عَاهَدْتُّمْ مِنَ الْمُشْرِكِيْنَ ثُمَّ لَمْ يَنْقُصُوْكُمْ شَيْئًا وَلَمْ يُظَاهِرُوْا عَلَيْكُمْ أَحَدًا فَاَتِمُّوْا اِلَيْهِمْ عَهْدَهُمْ اِلَى مُدَّتِهِمْ اِنَّ اللهَ يُحِبُّ الْمُتَّقِيْنَ (سورة التوبة الاية : ٤)

ஆனால் இணைவைப்பாளர்களில் எவர்களுடன் உங்களுக்கு உடன்படிக்கை ஏற்பட்டுப் பின்னர் அவர்கள் (தமது வாக்குறுதியை நிறைவேற்றுவதில்) உங்களிடம் எந்தக் குறைபாடும் செய்யாமலும் உங்களுக்கு எதிராக எவருக்கும் உதவாமலும் இருக்கிறார்களோ அவர்களுக்கு விதிவிலக்கு உண்டு. அத்தகையோரின் உடன்படிக்கையை உரிய காலம் வரையில் நிறைவு படுத்துங்கள். திண்ணமாக அல்லாஹ் இறையச்சம் உள்ளோரை நேசிக்கிறான்" (9 : 4) - மேலும் அல்லாஹ் கூறுகிறான்:

قال الله تعالى : وَاِنْ نَكَثُوْا اَيْمَانَهُمْ مِّنْ بَعْدَ عَهْدِهِمْ وَ طَعَنُوْا فِى دِيْنِكُمْ فَقَاتِلُوْا اَئِمَّةَ الْكُفْرِ اِنَّهُمْ لاَ اَيْمَانَ لَهُمْ (التوبة ١٢)

அவர்களுடன் உடன்படிக்கை ஏற்பட்ட பிறகு தங்க ளுடைய சத்தியங்களை முறித்துவிட்டு அவர்கள் உங்களுடைய தீன் - இறைமார்க்கத்தைத் தாக்க முற்பட்டால் இத்தகைய நிராகரிப்பின் தலைவர்களுடன் போர் புரியுங்கள். ஏனெனில் இவர்களின் சத்தியங்களுக்கு எந்த மதிப்பும் இல்லை" (9 : 12)

அரசின் அனுமதியுடன் வசிப்பவர்கள்: இந்நான்கு வகை யினரில் இவர்கள்தாம் அதிக உரிமைகள் பெற்ற வர்கள். ஏனெனில் இவர்கள் முஸ்லிம் நாடுகளில் - முஸ்லிம்களின் பாதுகாப்பை - பராமரிப்பைப் பெற்று வாழ்கிறார்கள். இந்த உரிமை அவர்கள் செலுத்தும் வரிகளுக்குப் பகரமாகும்.

ஆடைகள் விஷயத்தில் முஸ்லிம்களை விட்டும் அவர்கள் வேறுபட்டிருப்பதும் இஸ்லாத்தில் வெறுக்கப்பட்டி ருக்கும் தீமைகளையும் மற்றும் நகரா, சிலுவை போன்று அவர்களது மத அடையாளச் சின்னங்கள் எதையும் அவர் கள் பகிரங்கப் படுத்தாதிருப்பதும் கடமையாகும்.

இஸ்லாமிய அரசின் அனுமதியுடன் வசிக்கும் பிற மதத்தினர் தொடர்பான சட்டங்கள் அறிஞர்களின் நூல் களில் இடம்பெற்றுள்ளன. அவை அனைத்தையும் இங்கு எடுத்துரைக்க இயலாது.

والحمد لله رب العالمين و صلى الله وسلم على نبينا محمد و على آله وصحبه أجمعين